


B4
093

கனடா Canada KARAI OZHI

# காரை ஒளி



அரச பணி மூலம் மக்கள் சேவையில் உதவி அரசாங்க அதிபர் ஜெயசீலன்



காரை அபிவிருத்திச் சபையுடன் ஓர் சிறப்பு நேர்காணல்



கல்வியால் உயர்ந்து காரை கல்வியை உயர்த்தும் கல்விப் பணிப்பாளர் விக்கினேஸ்வரன்



காரைநகரின் மீள் எழுச்சிக்கு வித்திட்ட ஈழத்து சிதம்பர மகா கும்பாபிஷேகம்



காரை அபிவிருத்தியில் கணவர் வழியில் பணியாற்றும் திருமதி. விஜயகலா மகேஸ்வரன் பா.உ

ஒளி – 02 அரையாண்டு இலவச இதழ் யூன் – 2011

# காரை மக்களின் ஒளிமயமான எதிர்காலத்திற்கு வித்திட்ட ஈழத்துச் சிதம்பர மகா கும்பாபிஷேகம்

காரைநகரின் சைவப்பண்பாடு மேன்மையுற்று விளங்க மூலகாரணிகளாக அமைந்திருப்பன அங்கு எழுச்சிபெற்று விளங்கும் ஆலயங்களேயாயினும் வரலாற்றுச் சிறப்பும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பன ஒருங்கே அமையப்பெற்று அற்புதமும் மிகுந்து ஈழத்து சைவ மக்களின் புனிதமான தலமாக விளங்கப் பெறுகின்ற ஈழத்துச் சிதம்பரம் என அழைக்கப்படுகின்ற திண்ணபுர சிவன் கோயில் முதன்மை காரணியாகவுள்ளது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

இவ்வாலயத்தின் "மகா கும்பாபிஷேகம்" காலத்திற்கு காலம் நடைபெற்று வருவதற்கு காரை மக்கள் கண்ணும் கருத்துமாக இருந்து வருகின்றனர். அந்தவகையில் சென்ற 6.6.2011இல் நடைபெற்ற மகா கும்பாபிஷேகம் மிகவும் பிரமாண்டமான முறையில் ஏற்பாடுசெய்யப்பட்டு, பல்லாயிரக்கணக்கான அடியார்களின் பக்திப்பிரவாகம் பெருக்கெடுத்து விளங்க அருள்மயமாக நடைபெற்று முடிந்துள்ளது. முப்பத்துமூன்று குண்டங்களுடன் தமிழகத்திலிருந்து வருகைதந்திருந்த சிவாச்சாரியர்கள் உள்ளிட்ட நூற்றுக்கு மேற்பட்ட சிவாச்சாரியர்கள் கலந்துகொண்டிருந்த இச்சிறப்புமிகு கும்பாபிஷேகமானது ஈழத்தில் நடைபெற்ற இதுபோன்ற பிரமாண்டமான கும்பாபிஷேகங்களுள் மூன்றாவதாகக் கருதப்படுகின்றது. சைவ உணர்வுமிக்க காரைநகர் மக்களின் பேருதவியுடனும், இறைபணியில் ஈடுபட்டுள்ள ஈழத்துச்சிதம்பர அடியார் சபையின் ஒன்றுபட்ட கடின உழைப்பினாலும் எல்லாவற்றிற்கும் மேலாக சௌந்தராம்பிகை சகிதம் எழுந்தருளியிருக்கின்ற சுந்தரேஸ்வரப் பெருமானினதும், பூரணை, புஷ்கலை சகிதம் எழுந்தருளியுள்ள ஆண்டிகேணி ஐயனாரினதும் திருவருளினாலே நிறைவேறிய கும்பாபிஷேகத்தினை பொன்னாலை வரதராஜப்பெருமாள் தேவஸ்தான பிரதமகுரு சிவஸ்ரீ.க.ச.சோமாஸ்கந்தக்குருக்கள் அவர்கள் வழிநடாத்தி வைத்திருக்கின்றார். காரைநகர் மக்களுடைய அவலமான இடப்பெயர்விற்குப் பின்னர் நடந்தேறிய இம்மகாகும்பாபிஷேகமானது மீளக்குடியேறிய அம்மக்களின் ஒளிமயமான நல்வாழ்விற்கு வித்திடுவதாக அமைந்துள்ளதாகவே கருதப்படுகின்றது.



கும்பங்கள் வீதி வலம் வருதல்



சிவன் ஐயனார் கோபுர விமான அபிஷேகம்



நடேசர் விமான அபிஷேகம்



தமிழக சிவாச்சாரியர் சிவஸ்ரீ இராசப்பா குருக்கள் ஆசி வழங்கல்



சிவன் விமான அபிஷேகம்



கும்பாபிஷேக பிரதம குரு சிவஸ்ரீ சோமாஸ்கந்த குருக்கள் ஆசி வழங்கல் அருகில் சர்வபோதகாசிரியர் சிவஸ்ரீ மகாதேவாக் குருக்கள்.

# காரை ஒளியின் பார்வை

1991[ஆம்] ஆண்டு இடம்பெற்ற பாரிய இடப்பெயர்வானது காரைநகரின் கட்டுமாணத்தை அடியோடு தகர்த்து விட்ட ஒன்றாக அமைந்து விட்டது. இன்று இம்மண்ணின் மீள் கட்டுமாணம், அபிவிருத்தி என்பன பலதரப்பிலிருந்தும் கிடைத்துவரும் உதவியினால் படிப்படியாக முன்னெடுக்கப்பட்டு வருகின்றதாயினும் இடப்பெயர்வின் தாக்கம் நீங்கி பூத்துக்குலுங்கி வனப்பும் வளமும் மிக்க முன்னைய காரைநகரைக் காண்பதற்கு பல வருடங்கள் எடுக்கலாம். காரைநகர் மக்கள் கட்டிக்காத்து வந்த ஒற்றுமையும் சிதைக்கப்பட்டுள்ளதோ என ஐயுறும் வகையில் அங்கிருந்து கிடைக்கும் செய்திகள் எண்ணத் தூண்டுகின்றன. காரை மக்களின் பண்பாடு தனித்துவம்மிக்கது. அவர்களது சமயப்பற்றும்,சமய உணர்வும் விதந்து போற்றுதற்குரியன என்றெல்லாம் பிற மக்கள் கூறுகின்றபோது பெருமிதத்தால் பூரிப்படைகின்றோம். ஆனால் இன்று காரை மக்கள் மத்தியிலே காணப்படும் போட்டிகள், பூசல்கள், கருத்து மோதல்கள் என்பன பிற மக்களாலேயே சுட்டிக்காட்டப்படுவது மிகவும் கவலையளிப்பதாகவுள்ளது. இந்தநிலை தொடருமானால் சிதைக்கப்பட்ட காரை மண்ணின் முன்னேற்றம் பின் தள்ளப்படும் என்பதை உணர்ந்து கொண்டு பொது அமைப்புக்களில் அங்கம் வகிக்கும் சமூக சிந்தனையுள்ளவர்கள் அனைவரும் காரை மாதாவின் ஒரே பிள்ளைகள் என்ற உணர்வோடு ஒன்றுபட்டு கிடைத்து வருகின்ற உதவிகளை நழுவவிடாது திட்டமிட்டு உரிய முறையில் பயன்படுத்துவதன் வாயிலாக யுத்த சூழலில் அகப்பட்டு நொந்துபோன மக்களின் அவல வாழ்வில் ஒளியேற்றி வசந்தம் வீச வழியேற்படுத்துவோம்.

**வெளியீடு:**
கனடா – காரை கலாச்சார மன்றம்
**தொகுப்பாசிரியர்:**
திரு.கனக.சிவகுமாரன்
**இதழ் வடிவமைப்பு:**
மாறன் (கணபாலா)
GTM Enterprise
**கணினி அச்சுப்பதிப்பு:**
மலர் குழந்தைவேலு
**காரைநகர் செய்தியாளர்:**
சயந்தன்
**மின்னஞ்சல் முகவரி:**
karainagar@gmail.com

கடந்த காலங்களில் காரைநகரின் வளர்ச்சிக்கும், செழிப்பிற்கும், அதன் நற்பெயருக்கும் சமய, சமூக சேவையாளர்களும், மக்களால் ஏற்படுத்தப்பட்டிருந்த பொது அமைப்புக்களும் பாடசாலைகளும் ஆலயங்களும் உன்னதமான பங்களிப்பை செய்துள்ளன.

புலம்பெயர்ந்த அமைப்புக்களின் உதவிகளைப்பெற்று அபிவிருத்தியை முன்னெடுப்பதற்கு ஓர் பொது அமைப்பின் அவசியம் உணரப்பட்ட நிலையில் 2005[ஆம்] ஆண்டு காரைநகர் அபிவிருத்திச் சபை உருவாக்கம் பெற்றது. இடையிலே இச்சபையின் உறுப்பினர்களிடையே ஏற்பட்ட கருத்து முரண்பாடுகளினால் அரச அதிகாரி இச்சபையின் நடவடிக்கையில் தலையிட்டு புதிய நிர்வாகத்தை தெரிவு செய்யவேண்டிய நிலை ஏற்படுத்தப்பட்டிருந்தது துரதிஸ்டவசமானதாகும். எது எவ்வாறாயினும் திரு.க.சோமசேகரம் தலைமையில் அமைந்துள்ள தற்போதைய நிர்வாகமானது ஒற்றுமையுணர்வோடு சிறப்பாக செயலாற்றி வருவது அனைவருக்கும் மகிழ்ச்சியையும் மனநிறைவையும் தருகிறது.

இடம்பெயர்வின் பின்னர் உருவான மற்றோர் அமைப்பு கிழவன்காடு கலாமன்றமாகும். கிழவன்காடு என்ற குறிச்சிப்பெயரை இது தாங்கியிருந்தாலும் காரைநகர் முழுவதற்குமான கலைச்சேவையே இதன் நோக்கமாகவுள்ளது. ஆரம்பிக்கப்பட்ட குறுகிய காலத்துக்குள்ளாகவே காரை மக்கள் மத்தியில் கலை உணர்வை ஏற்படுத்தி பலரும் கலையிலே ஈடுபாடு கொள்ள வைத்திருக்கின்ற பணி பாராட்டிற்குரியதாகும்.

ஈழத்துச்சிதம்பரத்தின் வளர்ச்சியை நோக்காகக் கொண்டு திருப்பணிச்சபை, அடியார் சபை ஆகிய இரு சபைகள் இரு துருவங்களில் செயற்பட்டிருந்தன. இவ்விரு சபைகளுக்கிடையேயான பிணக்குகள் காவற்துறை, நீதிமன்றம் ஆகியன வரைக்கும் எடுத்துச் செல்லப்பட்டபோது ஆலய பக்தர்கள் தாங்கொணாத வேதனையில் குமுறினார்கள். மனதிலுள்ள அழுக்குகளையெல்லாம் களைந்து தூய்மையான உள்ளத்துடன் இறைவனை அணுகும் இடமே ஆலயமாகும். அத்தகைய ஆலயத்தின் பெயரால் இயங்கிய இவ்விரு சபைகளும் நடந்து கொண்ட விதம் அடியார்களிற்கு ஆச்சரியத்தையும், துயரத்தையும் ஏற்படுத்தியிருந்தது. இறைவனின் சோதனை என்று கூறுவார்களே! அத்தகைய சோதனையோ என எண்ணும் வகையில் இரு சபைகளும் தமக்கிடையேயான அனைத்து முரண்பாடுகளையும் தீர்த்துக்கொண்டு ஈழத்துச் சிதம்பர அடியார் சபை என்கின்ற ஒரே சபையாக ஒற்றுமையோடு இயங்கி ஆலய வளர்ச்சியை முன்னெடுக்க ஆரம்பித்திருப்பது மிக விரைவில் காரை மண் மீள்எழுச்சி பெற்று தரணி போற்றும் நகராக மீண்டும் விளங்கவுள்ளது என்பதற்கான நம்பிக்கை ஒளி சுடர் விட தொடங்கியுள்ளதற்கான அடையாளமாக விளங்குகின்றது. சென்ற யூன் 6ஆம் திகதி பிரமாண்டமான முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு இறைவன் திருவருளால் வெகு சிறப்பாக நடந்தேறிய ஈழத்து சிதம்பர மகா கும்பாபிஷேகமானது ஆலய வரலாற்றில் பதிவு செய்யப்பட்ட முக்கியமான நிகழ்வாக அமைந்து விட்டது. இதனை நடாத்தி வைத்த அடியார்சபை நிர்வாகம் சைவ மக்களின் பாராட்டிற்கும் நன்றிக்குமுரியதாக விளங்குகின்றது.ஒற்றுமையின் விளைவு சிறப்பாக அறுவடை செய்யப்பட்டுள்ளது.

சமயப்பணியில் அறுபது ஆண்டுகளிற்கு மேலாக ஈடுபட்டிருக்கும் இன்னோர் அமைப்பு மணிவாசகர் சபையாகும். இச்சபையின் அளப்பரிய பணிகள் காரணமாக ஈழத்திலும், தென்னிந்தியாவிலும் சைவ அறிஞர்கள் மத்தியில் பிரபல்யம் மிக்க சபையாக மிளிர்கின்றது. காரைநகரில் சமயப்பண்பாடும், ஒழுக்கமும் பேணப்படுவதில் மணிவாசகர் சபையின் பங்களிப்பு முக்கியமானதாகும்.

எனவே காரைநகரின் வளத்தை செழிப்புற வைப்பதில் காரைநகரை மையப்படுத்திய அமைப்புக்களாக விளங்கும் காரைநகர் அபிவிருத்திச் சபை, கிழவன்காடு கலாமன்றம்,ஈழத்துச் சிதம்பர அடியார் சபை, காரைநகர் மணிவாசகர் சபை ஆகியன முன்னிலைப்படுத்தப்படுவதுடன் உதவியளிக்கப்பட்டு அவற்றின் பணிகள் விரிவடைவதற்கு ஆதரவளிக்கவேண்டியது காரை மக்களின் கடமையாகும். அதேவேளையில் இவ்வமைப்புக்களில் அங்கம் வகிப்போர் இனிமேலும் கருத்து மோதல்களுக்கு இடமளியாது ஒற்றுமையோடு பணியாற்றுவார்கள் என காரை ஒளி நம்புகின்றது.

கல்வி, கலை, விளையாட்டு ஆகிய துறைகளை ஊக்குவிக்கும் பணியில் இரண்டு தசாப்தங்களிற்கு மேலாக வாரிவளவு நல்லியக்க சபை ஆற்றிய பணிகள் மகத்தானவை என்பதுடன் மக்கள் மனதில் இன்றும் நிலைத்து நிற்பனவாகவுள்ளன. குறிப்பிட்டுக் கூறுவதானால் இச்சபையின் செயலாளராக இறுதி மூச்சுவரை அர்ப்பணிப்போடு செயற்பட்டிருந்த பட்டுமாமா என காரைநகர் மக்களால் அன்போடு அழைக்கப்பட்ட அமரர்.பத்மநாதன் அனைவராலும் மறக்கப்படமுடியாதவர். முன்பள்ளிகளின் செயற்பாட்டிலும் இவரது பணி பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. பலமான ஊக்குவிப்புக்களமாக விளங்கிய வாரிவளவு நல்லியக்கச் சபையின் பணிகள் தொடரப்படவேண்டும் என இன்று பல சமூக ஆர்வலர்கள் குரல்கொடுக்க ஆரம்பித்துள்ளனர். காலத்தின் தேவையும் அதுவேயாகும். சபையின் பணிகளைத் தொடர்வதற்கான நடவடிக்கைகளை எடுக்கப்போவதாக காரை அபிவிருத்திச் சபைத் தலைவர் திரு.க.சோமசேகரம் அறிவித்துள்ளது மிகுந்த மகிழ்ச்சியளிப்பதுடன் இது நிச்சயம் நிறைவேற்றிவைக்கப்படும் என காரை ஒளி எதிர்பார்க்கிறது.

# மகா கும்பாபிடேக மகத்துவம்

அங்கிங்கெனாதபடி நிறைந்திருப்பவனாகிய இறைவனை ஆலயங்கள் கட்டி விக்கிரகங்களில் எழுந்தருளச் செய்து வழிபடுவதே ஆலய வழிபாடு. ஆலயங்கள் ஆன்மாக்களைத் திருவருள் நெறி நின்று இறைவனை அடைந்து உய்தியடைய வழிகாட்டுவனவாகும்.

" ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்பது சிவஞானபோதம். எனவே இவ்வாலயங்களைப் பெருமையும் தூய்மையும் அழகும் உடையனவாய் அமைத்துப் பேணுதல் மக்களின் பெருங்கடனாகும். விழாக்களும் நித்திய நைமித்தியங்களும் சிறப்புற நடைபெறுவது ஆலய வளர்ச்சிக்கு இன்றியமையாதன. காலத்துக் காலம் குடமுழுக்காட்டி சிறப்பு விழாக்கள் செய்துவருவது திருவருட்சக்தி பெறுவதற்கு இடமளிப்பதாகும்.

ஆலயம் என்பது தொழுபவர் நெஞ்சில் மட்டுமல்ல, உண்மையாகவே சமுதாயத்திற்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும். ஒரு ஊருக்கு உண்மை அழகையும், ஒளியையும் கொடுப்பன ஆலயங்களே. திருக்கோயில் இல்லாத ஊரை "அடவிக்காடே" என்று அப்பர் சுவாமிகள் வர்ணிக்கிறார். ஆலயங்களைக் கட்டிக் கும்பாபிடேக விழாக்களை நம் முன்னோர் எடுத்துத் தெய்வீகப்பணி செய்த நோக்கம் இதுவேயாகும். ஆனால் கோயில்களைக் கட்டிவிட்டால் மட்டும் போதாது. தொடர்ந்து கோயிற்பணி சிறப்பாகவும், நித்திய, நைமித்தியங்கள் ஒழுங்காக நடைபெறவும் வழிகாண வேண்டிய கடமை சைவ நன்மக்களுக்கு உண்டு.

மந்திரம் மூலமாகவும், அபிஷேகம் மூலமாகவும் விக்கிரகத்திற்குச் தெய்வீகசக்தி கொடுக்கப்படவேண்டும். மந்திரம் முதலிய கிரியைகள் விக்கிரகத்திலிருந்து தெய்வீகசக்தி வீசுவதற்கு உதவுகின்றன. கிரியைகளோடு கூடிய பூசைகள் இல்லாவிட்டால் விக்கிரகத்திலிருந்து திருவருட்சக்தியை எதிர்பார்க்க முடியாது. இதனாலேயே ஆலயங்களில் விழாக்கள் சிறப்பாக அமையவேண்டும் என்று வற்புறுத்தப் படுகிறது.

எல்லா உலகங்கட்கும் அப்பாற்பட்ட இறைவன் ஆன்மாக்களின் பொருட்டு திருக்கோயிலுள் இருக்கும் திருமேனிகளில் நின்று அவர்கள் செய்யும் வழிபாடுகளை ஏற்றுக்கொண்டு இம்மை, மறுமை, வீடு என்பவற்றில் அவரவர்கள் வேண்டிய பயனை அவரவர்கட்கு அருளுகின்றான்.

"தாபர சங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க்கு அருளை வைப்பன்."

என்பது சிவஞானசித்தியார்-118. (தாபர சங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று- சிவலிங்கம் சிவனடியார் என்று சொல்லப்பட்ட இரண்டு திருமேனிகளையும் ஆதாரமாகக் கொண்டு நின்று, மாபரன் - மாட்சிமை உடைய பரமசிவன், பூசை கொண்டு -ஆன்மாக்கள் பத்தியோடு புறத்தே செய்யும் பூசையை ஏற்று, மன்னுயிர்க்கு அருளை வைப்பன் - நிலைபெற்ற அவ்வான்மாக்களுக்கு அருள் செய்வன்.)

இறைவன் மற்றைய இடங்கள் போல் அல்லாமல் திருக்கோயிலில் இருக்கும் திருமேனிகளில் இருந்து அருள் செய்வது மந்திர சாந்நித்தியத்தினாலேயாம். இஃது இத் திருமேனிகளில் உண்டாகச் செய்வதே "பெருஞ்சாந்தி" எனப்படும். "மகா கும்பாபிடேகம்" என்று சொல்லப்படுவது இதுவே. புதியனவாய் அமைக்கப்படும் ஆலயங்களில் இது முதலாவதாகச் செய்யப்படல் வேண்டும். அதன்பின்பே நித்திய பூசைகளும், நைமித்தியமான விழாக்களும் செய்தற்குரியன. பழமையாய் உள்ள ஆலயங்களிலும் இம் மந்திர சாந்நித்தியம் நீங்காதிருத்தற் பொருட்டு அவ்வப்பொழுது பெருஞ்சாந்தி செய்யப்பெறல் வேண்டும்.

பெருமைக்கும், நுண்மைக்கும், பேரருட்கும், பேற்றின் அருமைக்கும் ஒப்பில்லாத இறைவனுக்கு உயர்ந்த இராஜகோபுரம் கட்டுவதன் நோக்கம் என்ன என்பதைச் சிந்திக்கவேண்டும். உயர்ந்து நிற்கும் இராஜகோபுரங்கள் அனைத்தும் மனிதனுடைய உள்ளம் உயர வேண்டும் என்பதையே காட்டுவது. இதற்கு வழிகாட்டுவன திருக்கோயில்களே. விமானக் கோபுரங்களுக்குச் செய்யும் கும்பாபிடேகம் மக்கள் ஆலயங்களையும் அரனெனத் தொழுவதற்காகச் செய்யப் பெறுவது.

திருக்கோயிலுள் இருக்கும் திருமேனிகளிற் செய்யும் பலவகை வழிபாடுகளுள் "பெருஞ்சாந்தி" தலையாயது. அதனால் இது நடைபெறும் இடங்களில் மக்கள் இன்றியமையாது சென்று கண்டு வழிபட்டுப் பயன் பெறுதல் வேண்டும்.

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்மதி சூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்"

என்னும் திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் கூறும் கருத்தினைத் திருஞானசம்பந்தர் திருமயிலாப்பூர்த் திருத்தலத்தில் பல வகையாக விளக்கியருளத் தொடங்கி ஐப்பசி ஓணவிழா, கார்த்திகை விளக்கீடு, ஆதிரை நாள், தைப்பூசம், மாசிக்கடலாட்டு, பங்குனி உத்திர விழா முதலியவைகளைக் குறிப்பிட்டு முடிவில்,

"பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்"

என்று அருளினார். இதனால் இச் சிறப்பு வழிபாட்டினைச் சென்று கண்டு வணங்குதல் மக்கட் பிறப்பு எடுத்ததன் பயனாகும் என்பது தெளிவு.

ஆலயத் திருப்பணியில் பங்கு கொள்வதென்பது பெருந்தவமுடையார்க்கே வாய்ப்பதொன்றாகும். சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மானின் திருநடனத்தைக் காண்பதற்காக மனிதப் பிறவியை வேண்டுகின்றார் திருநாவுக்கரசர். இத்தகைய சிவனுறையும் திருத் தலத்திற்குப் பெருஞ்சாந்தி விழாவும் குடமுழுக்கும் வெகு சிறப்பாக நடந்து முடிந்திருப்பது காரைநகர் சைவமக்களும், பொதுவாக ஈழத்துச் சைவ மக்களும் செய்த தவப்பயனாகும். பக்தியும் பண்பும் பாரினில் பெருகி இன்பம் கொழிக்கும் இந்தச் சிவபுண்ணியமான திருத்தொண்டில் காரைநகர் மக்கள் எண்ணத்தாலும் உழைப்பாலும் பொருளாலும் பங்குகொண்டு உழைத்தமைக்குச் சைவ உலகம் போற்றிப் பாராட்டும்.

வாழிய காரை நகர்!
வாழிய அன்பர் கூட்டம்!
வாழிய பணிகள் செய்தோர்!
வணங்குவோர், வாழ்த்துவோர்கள்!
வாழிய குடமு முழுக்கு
வனப்புறு திருநாள்! வாழி
ஏழிசைத் தாயும் ஓங்கும்
எந்தையும் வையகத்தே!



**திரு. தி. விசுவலிங்கம்**
**தலைவர், சைவ சித்தாந்த மன்றம், கனடா.**

## காரை அன்பர்கள் இருவரின் நிர்வாகத்தில் கனடாவில் சைவப்பணியாற்றி வரும் இரு சைவ மன்றங்கள்

கனடாவில் சைவப்பணியாற்றி வருகின்ற சைவத்தமிழ் மக்கள் மத்தியில் பிரபல்யம் மிக்க இரு அமைப்புக்களாக ஸ்காபுறோ நகரில் இயங்கும் ஆதி அருள்நெறி மன்றமும், மிசிசாகா நகரில் சைவசித்தாந்த மன்றமும் விளங்குகின்றன. இளம் சமுதாயத்தின் மத்தியில் சமய நம்பிக்கை ஏற்படும் வண்ணம் சமய அறிவை ஊட்டியும், சமயப்பண்பாடு மிக்கவர்களாக உருவாக்கும் வகையில் சமய வகுப்புக்கள், சமயபாட போட்டிப் பரீட்சைகள் பண்ணிசை வகுப்புக்கள் போன்றனவற்றை ஏற்பாடு செய்தும், சமயநூல்கள் பதிப்பித்து வெளியிட்டும் இன்னும் பல பணிகளை ஆற்றியும் இவ்விரு மன்றங்களும் கனடா வாழ் சைவத்தமிழ் மக்களின் நன்மதிப்பைப் பெற்று விளங்குகின்றன.

ஆதி அருள்நெறி மன்றத்தினை ஆரம்பித்து நிர்வகித்து வருபவர் காரைநகர் தங்கோடையைச் சேர்ந்தவரும், ஸ்காபுறோ நகரின் பிரபல பல்வைத்திய நிபுணராக விளங்குபவருமான டாக்டர் ஆதிகணபதி சோமசுந்தரம் ஆவார். இவரினால் சிதம்பர ஆதிநடேசர் ஆலயம் என்கின்ற சிறப்புமிகு ஆலயம் ஒன்றும் ஸ்தாபிக்கப்பெற்றுள்ளதுடன் இவ்வாலயத்தில் நித்திய நைமித்திய கருமங்களும் நடைபெற்று வருகின்றன.

மிசிசாகா நகரிலுள்ள சைவ சித்தாந்த மன்றத்தினை ஸ்தாபித்து அதன் தலைவராகவும் இருந்து பணியாற்றி வருபவர் இலங்கையில் பிரபல கணித ஆசிரியராகவிருந்து ஓய்வு பெற்றவரும் வலந்தலையை சேர்ந்தவருமாகிய திரு.தில்லையம்பலம் விசுவலிங்கம் ஆவார். இவரது பாரியார் திருமதி.வடிவழகாம்பாள் அவர்களை ஆசிரியராக கொண்டு அன்பு நெறி என்கின்ற மாதாந்த சமய சஞ்சிகை மன்ற வெளியீடாக வெளியிடப்பட்டு வருகின்றது. திரு.விசுவலிங்கம் ஈழத்து சிதம்பர திருத்தொண்டர் சங்கத்தினை (கனடா-காரை கலாச்சார மன்றமாக பெயர் மாற்றம் பெற்றது)ஆரம்பித்தவர்களுள் முக்கியமானவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்விரு சைவ மன்றங்களும் காரைநகரைச் சேர்ந்த அன்பர்களினால் ஆரம்பிக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வருவது என்பது ஈழத்து சைவ அறிஞர்களினால் விதந்து போற்றப்படுகின்ற காரைநகர் மக்களின் ஆழமான சமய ஈடுபாட்டினையும் சமயநம்பிக்கையையும் எடுத்துக்காட்டும் சான்றுகளாக அமைந்துள்ளன.

கனடா-காரை கலாச்சார மன்றத்தின் ஈராண்டுப் பொதுக்கூட்டம் புதிய நிர்வாகம் ஒன்றை தெரிவுசெய்யும் பொருட்டு சென்ற பெப்ரவரி மாதம் 23ம் திகதி செல்வச்சந்நிதி முருகன் ஆலய திருமண மண்டபத்தில் திரு.ரவி.ரவீந்திரன் தலைமையில் நடைபெற்றது. செயலாளர் திருமதி.மலர் குழந்தைவேலுவினால் செயற்பாட்டு அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு பொதுச்சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பொருளாளர் திரு.ச.தவராசா முழுமையான வரவு-செலவு அறிக்கையினை சமர்ப்பிக்க முடியாமைக்கு வருத்தம் தெரிவித்ததுடன் ஒரு மாத காலத்தினுள் கணக்காய்வு செய்யப்பட்ட முழுமையான அறிக்கை அங்கத்தவர்களிற்கு அனுப்பிவைக்கப்படும் என உறுதியளித்ததை சபை ஏற்றுக் கொண்டது.

புதிய நிர்வாக சபை தெரிவிற்கான நேரம் வந்தபொழுது இத்தெரிவினை நடாத்தி வைக்க திரு.கனக.சிவகுமாரன் தற்காலிக தலைவராக நியமிக்கப்பட்டார். கடந்த நிர்வாகம் சிறப்பாகச் செயற்பட்டதை கருத்திற்கொண்டு அடுத்த பதவிக்காலமாகிய மேலும் இரண்டு வருடங்களிற்கு இந்த நிர்வாகம் பதவியிலீருக்க வேண்டும் என்கின்ற விருப்பத்தை பல உறுப்பினர்களும் தெரிவித்தபோது இதற்கு மாறான கருத்து எதுவும் முன்வைக்கப்படாத நிலையில் சென்ற நிர்வாகசபை உறுப்பினர்கள் ஒவ்வொருவரினதும் சம்மதத்தினை தற்காலிகத் தலைவர் கேட்டிருந்தார். அனைவரும் சம்மதம் தெரிவித்ததை அடுத்து கடந்த நிர்வாகம் மேலும் இரு ஆண்டுகளிற்கு பதவி வகிக்கும் என அறிவிக்கப்பட்டது. நிர்வாக உறுப்பினர்கள், பதவிக்காலம் நிறைவுபெற்ற திட்டமிடல் போஷகர் சபை உறுப்பினர்கள் ஆகியோரின் வெற்றிடங்களிற்கு புதிய உறுப்பினர்களும், கணக்காய்வாளர், இதழாசிரியர் ஆகியோரும் தெரிவுசெய்யப்பட்டதைத் தொடர்ந்து திரு.ரவி.ரவீந்திரன் மீண்டும் தலைமைப்பொறுப்பை ஏற்றுக்கொண்டு தமது நிர்வாகத்தை அங்கீகரித்து மீண்டும் பதவியிலமர்த்திய பொதுச்சபை உறுப்பினர்களிற்கு நன்றியைத் தெரிவித்ததுடன் உறுப்பினர்களின் நம்பிக்கையும் எதிர்பார்பும் வீண்போகா வண்ணம் சிறப்பாகச் செயற்பட்டு பணிகளை முன்னெடுக்கப் போவதாக உறுதியளித்தார்.

## கனடா-காரை கலாச்சார மன்றத்தின் கடந்த நிர்வாகம் தொடர்ந்து இரண்டு ஆண்டுகளிற்கு பதவி வகிக்க பொதுச்சபை அங்கீகாரம்

மன்றத்தின் கூட்டங்களை நடாத்தவும், மன்றச் சொத்துக்களை வைத்துப் பேணவும், உறுப்பினர்கள் ஒன்றுகூடுவதற்கும் பயன்படக்கூடி சொந்தமான கட்டிடம் ஒன்றின் தேவை குறித்து சில உறுப்பினர்கள் பிரஸ்தாபித்தபோது இப்படியான ஓர் கட்டிடத்தினை வாங்கும் சாத்தியம் குறித்து ஆராய்ந்து தீர்மானிக்கும் பொறுப்பினை பொதுச்சபை நிர்வாக சபைக்கு வழங்கியது.

**அடுத்த பதவிக் காலத்திற்கான நிர்வாக சபை விபரம்:**

தலைவர்:திரு.ரவி ரவீந்திரன்
உப தலைவர்:திரு.தர்மலிங்கம் பரமசிவம்

செயலாளர்:திருமதி.மலர் குழந்தைவேலு
உப-செயலாளர்:திரு.பாலசுப்பிரமணியம் கணேசன்

பொருளாளர்:திரு.தவராசா சங்கரப்பிள்ளை
உப-பொருளாளர்:திரு. பொன்னம்பலம் நடனசபேசன்



**நிர்வாக சபை உறுப்பினர்கள்**

திரு.கோபால் மயில்வாகனம்
திரு.குகதாசன் சோமசுந்தரம்
திரு.மோகன் சங்கரப்பிள்ளை
திரு.நாதன் தர்மலிங்கம்
திரு.உருத்திரலிங்கம் தம்பையா
(படம் உள்ளடங்கவில்லை)

**திட்டமிடல் போஷகர் சபை**

திரு.கனக.சிவகுமாரன்
திரு.சிவராமலிங்கம் சிவசுப்பிரமணியம்
திருமதி.கிருஷ்ணவேணி சோதிநாதன்
திரு.அம்பலவாணர் கந்தப்பு
திரு.குகநேசபவன் சிவசுப்பிரமணியம்

கணக்காய்வாளர்:திரு.முருகேசம்பிள்ளை வேலாயுதபிள்ளை
இதழாசிரியர்: திரு. கனக. சிவகுமாரன்

# சிறப்புற நிகழ்ந்த காரை ஒளி வெளியீட்டு விழா



காரை ஒளியின் வெளியீட்டு விழா சென்ற பெப்ரவரி 23ம் திகதி செல்வச்சந்நிதி முருகன் ஆலய திருமண மண்டபத்தில் சிறப்புற நிகழ்ந்தது. மன்றத்தின் தலைவர் திரு.ரவி.ரவீந்திரன் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில் CTBC வானொலியில் நிகழ்ச்சித் தயாரிப்பாளராக பணிபுரிந்த திரு.கந்தையா பஞ்சலிங்கம்(சிவமணி) அவர்கள் விமர்சன உரையினை நிகழ்த்தியிருந்தார். அவர் தனது உரையில் காரைநகருக்கும் ஊடகத்துறைக்கும் நீண்டகாலமாக நெருங்கிய தொடர்பு இருந்து வருவதாகவும் இலங்கையிலும், புலம்பெயர்ந்த நாடுகளிலும் இத்துறையில் ஈடுபட்ட பலர் பிரபல்யம் பெற்று விளங்கியதுடன் இன்றும் பலர் முன்னணி ஊடகவியலாளர்களாக பரிணமித்து காரைநகருக்கு பெருமை சேர்த்து வருகிறார்கள் எனவும் குறிப்பிட்டார். காரை ஒளி அழகிய வடிவமைப்புடன் ஆவலைத்தூண்டும் பல நல்ல விடயங்களை தாங்கி விளங்குவதாக தமது விமர்சன ஊரையில் திரு.பஞ்சலிங்கம் மேலும் குறிப்பிட்டார். மன்றத்தின் முன்னாள் திட்டமிடல் போஷகர் சபை உறுப்பினர் திரு.முருகேசம்பிள்ளை வேலாயுதபிள்ளை வெளியீட்டுரை ஆற்றி மன்றத்தின் பணிகளிற்கு ஆதரவாக இருந்து ஊக்கிவித்து வருகின்ற குழந்தை வைத்திய நிபுணர் டாக்டர் வி.விஜயரத்தினம் அவர்களிற்கு காரை ஒளியின் முதற்பிரதியை வழங்கி வெளியிட்டு வைத்ததைத் தொடர்ந்து சஞ்சிகையின் ஆசிரியர் திரு.கனக.சிவகுமாரனின் பதிலுரை இடம்பெற்றது. செயலாளர் திருமதி.மலர் குழந்தைவேலுவின் நன்றியுரையுடன் வெளியீட்டு விழா நிறைவுற்றது.

## கனடா–காரை கலாச்சார மன்றத்தின் பனிகால ஒன்றுகூடல்

கனடா-காரை கலாச்சார மன்றத்தினால் வரும் டிசம்பர் மாதம் நடாத்தத் திட்டமிட்டுள்ள பனிகால ஒன்றுகூடல் தொடர்பில் சில அங்கத்தவர்கள் மத்தியில் தப்பான அபிப்பிராயம் நிலவுவதாக உணரப்படுவதனால் அது குறித்த ஓர் தெளிவான விளக்கத்தை நிர்வாகம் அளிக்க விரும்புகின்றது.

உலகளாவிய ரீதியில் அனைத்துச் சமூகங்களிற்கும் மொழி, மதம் கடந்த பொதுவான விடுமுறையாக மார்கழி விடுமுறை அமையப்பெற்று விளங்குகின்றது. கனடாவிலே காலம் காலமாக ஒன்றுகூடி மகிழ்வது வழமையாக இருந்து வருகின்றது. எனவே கனேடிய நீரோட்டத்தில் தவிர்த்துவிடமுடியாத ஒன்றாக இந்த விடுமுறையிலான ஒன்றுகூடல் உள்ளது. மிக வேகமாக வளர்ந்து வருகின்ற எமது எதிர்காலச் சந்ததி இந்த விடுமுறையைக் கழிப்பதற்கு களம் அமைத்துக் கொடுக்க வேண்டிய கடப்பாடு ஒவ்வொரு சமூகத்தைச் சார்ந்ததாகவுள்ளது. இதிலிருந்து தவறுவோமேயானால் அவர்களாகவே அதற்கான ஈடுபடுதலை ஏற்படுத்திக் கொள்வார்கள். நாம் இந்த ஒன்றுகூடலை நடாத்துவதன் மூலம் எமது இளம் சந்ததி வேற்றின மக்களுடன் ஒன்றுகூடும் வாயப்பினைத் தவிர்ப்பதுடன் மட்டுமல்லாது சமூகமாக நாம் இதனைச் செய்கின்றபோது உணர்வுப் பரிமாற்றங்கள் எமக்குள்ளேயே ஏற்படும் என்பதுடன் தொடர்புகளும் பேணப்படுகின்றன. நாம் ஒன்றுகூடாமல் விடுவது என்பது நம் எதிர்கால சந்ததிக்கு வழங்குகின்ற தண்டனை என்பது மட்டுமல்லாது மற்றவர்கள் எல்லோரும் ஒன்றுகூடும்போது தாம்மட்டும் தனித்து விடப்படுவதான தாழ்வு மனப்பான்மை மேலோங்க வழியேற்படும். எனவே ஆண்டு இறுதியில் பரிசில்கள் பெறவேண்டும் என்கின்ற அவர்களது விருப்பத்தையும் ஒன்றுகூடி மகிழவேண்டும் என்கின்ற எதிர்பார்ப்பினையும் நிறைவேற்றி அவர்களனைவரையும் எம்மோடு ஈடுபாடுகொள்ள வைக்கின்ற களமாக பனிகால ஒன்றுகூடலை பயன்படுத்துவோம்.

கனடா-காரை கலாச்சார மன்றம் திட்டமிட்டுள்ள ஒன்றுகூடலில் சிறுவர்கள், இளையோர், பெரியோர், முதியோர் என அனைவரும் கலந்து கொள்ளும் வாய்ப்பு உள்ளதுடன் அவர்கள் தங்களுக்கு இருக்கக் கூடிய கலைத் திறன்கள் உள்ளிட்ட எத்தகைய திறன்களானாலும் சுவைபட வெளிப்படுத்தும் வகையிலான நிகழ்ச்சிகள், சிறுவர்களிற்கான பரிசில்கள் வழங்கல் நிகழ்ச்சி ஆகியனவற்றுடன் சுவையான உணவுகளை உண்டு, பேசி சந்தோசிக்கக் கூடியவகையில் இப்பனிகால ஒன்றுகூடல் சிறப்பாக ஒழுங்கமைக்கப்படவுள்ளது.

எனவே மன்றம் நடாத்தவுள்ள பனிகால ஒன்றுகூடலில் காரைநகர் கலாச்சாரத்திற்கோ அல்லது சைவப் பண்பாட்டிற்கோ முரணான எந்த அம்சமும் இல்லை என்பதையும் எமது எதிர்கால சந்ததியுடன் எமது உணர்வுகளையும், எமது கலை, பண்பாடுகளையும் பகிர்ந்து கொள்ளும் பயனுள்ள நிகழ்வாகவே பனிகால விடுமுறையை சந்தோசித்துக் கழிப்பதற்கான ஒன்றுகூடல் விளங்கும் எனவும் தெளிவுபடுத்துகின்றோம்.

### 110 ஆண்டுகள் பின்தள்ளப்பட்ட காரைநகர்

*1910ம் ஆண்டு காரைநகரின் சனத்தொகை ஏறத்தாள 10ஆயிரமாக இருந்தது. 1991ம் ஆண்டு இடப்பெயர்வுக்கு முன்னர் 27ஆயிரமாக இருந்த சனத்தொகை மீளக் குடியேறிய பின்னர் ஏறத்தாள 10ஆயிரமாக குறைந்து 110ஆண்டுகளிற்கு முன்பிருந்த நிலைக்கு வீழ்ந்துள்ளது. 2008ம் ஆண்டில் இங்கு பிறப்பு வீதம் 17ஆகவும் இறப்பு வீதம் 4.3 ஆகவும் இருந்துள்ளது.*

# karainagar.com

## எம்மை காரைநகருக்கு அழைத்துச் செல்கிறது.

ஆயிரக்கணக்கான காரைநகர் மக்கள் கண்ணான காரை மண்ணை விட்டு பொன்னான கனடா நாட்டிற்கும், ஏனைய நாடுகளிற்கும் புலம்பெயர்ந்து வாழ நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளார்கள். நானும் இங்கு வந்து நாற்பத்தெட்டு வருடங்களாகின்றன. நான் வந்திருந்த காலகட்டத்தில் தமிழ் மக்களைக் காண்பது என்பது மிக அரிதாகவே இருந்தது.காலம் செல்லச் செல்ல தமிழ் மக்களின் வருகை அதிகரித்து வந்தது. இன்று மூவாயிரத்திற்கும் மேற்பட்ட காரைநகர் மக்கள் இங்கிருப்பதாக கூறப்படுகிறது. இத்தொகையானது இடப்பெயர்விற்கு முன்னதாக காரை மண்ணின் சனத்தொகையின் பன்னிரண்டு சதவீதத்திற்கும் அதிகமானதாகும்.

காரைநகர் மக்களை தனித்தோ ஒன்றுசேரவோ சந்திப்பதற்கு வாய்ப்பற்ற நிலை இருந்த சமயத்தில் தற்போது கனடா-காரை கலாச்சார மன்றம் என விளங்குகின்ற ஈழத்துச் சிதம்பர திருத்தொண்டர் சங்கம் என்ற அமைப்பு 1987ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட பின்னர் காரை மக்களைச் சந்திக்கவும், அவர்களுடன் அளவளாவி ஊரின் நினைவுகளை பகிர்ந்து மகிழும் வாய்ப்பும் உருவானது. அன்று தொடக்கம் கனடா-காரை கலாச்சார மன்றம் நடாத்துகின்ற எத்தகைய நிகழ்வானாலும் குறிப்பாக காரைவசந்தம், காரைக் கொண்டாட்டம், றிச்மண்ஹில் இந்து ஆலய ஆருத்திரா தரிசனம் உள்ளிட்ட அனைத்து நிகழ்வுகளிலும் தவறாது கலந்துகொள்வேன். இந்த நிகழ்வுகள் எப்போது நடக்கவுள்ளன என்பதை முன்னதாகவே அறிந்து மற்றைய அலுவல்களை ஒத்திவைத்துவிட்டு அவற்றில் கலந்துகொள்ள நாட்களை ஒதுக்கி குறித்து வைத்துக்கொள்வேன். இந்நிகழ்வுகளை சிறப்பாக நடாத்துவதற்கு அயராது உழைத்து வருகின்ற கடந்த கால நிர்வாகங்களும், தற்போதய நிர்வாகமும் போற்றுதற்குரியன.

**கனடா வாழ் காரைநகர் பிரபலங்கள் மன்றம் தொடர்பான கருத்துக்களைப் பகிர்ந்துகொள்ளும் பக்கம்**

காரை வசந்தம் கலை விழாவில் இரு தடவைகள் பிரதம விருந்தினராக கலந்து கொண்டதுடன் இவ்விழாவிற்கு வருகை தந்திருந்த காரைநகர் மக்களுடன் ஊரின் பெருமைகளையும் சிறப்புக்களையும் பகிர்ந்து கொள்ளக்கூடிய வாய்ப்பிற்கு மகிழ்கின்றேன். மன்றத்தின் இணையத்தளமான karainagar.com புதுப்பொலிவுடன் பார்க்கவேண்டும் என்கின்ற ஆவலை தூண்டுவதாக மாற்றம்பெற்று வருகிறது. இதனையும் தவறாது பார்த்து வருவேன். கனடாவிலும், காரைநகரிலும் நடக்கும் நிகழ்வுகளையும், செய்திகளையும் புகைப்படங்களையும் உடனுக்குடன் வெளியிட்டு வருகின்றது. இவற்றைப் பார்வையிடும்போது காரைநகருக்கு நேரில் சென்றது போன்ற உணர்வு ஏற்படுகின்றது. இச்சேவையும் பாராட்டுக்குரியதாகும்.

மன்றத்தின் அரையாண்டு வெளியீடாகிய காரை ஒளி என்கின்ற சஞ்சிகை அழகிய வடிவமைப்பில் ஆவலைத் தூண்டும் கவர்ச்சியான தலைப்புக்களுடன் காரைநகர் மற்றும் மன்றம் தொடர்பான செய்திகளையும், கட்டுரைகளையும் பிரசுரித்து வருகிறது.எதிர்காலத்தில் பல புதிய விடயங்கள் இச்சஞ்சிகையில் இடம்பெறும் என எதிர்பார்ப்பதுடன் மன்றத்தின் இப்பணியினை காரை மக்கள் வரவேற்று ஆதரிப்பது உறவுப்பாலத்தை வலுப்படுத்த உதவும்.



எமது ஊரிலுள்ள ஆலயங்கள், பாடசாலைகள், வைத்தியசாலை என்பனவற்றின் வளர்ச்சிக்கு உதவுவதில் ஊர்ப்பற்றுடனும், அர்ப்பணிப்புடனும் உழைத்து வருகின்ற கனடா-காரை கலாச்சார மன்றத்தின் பணிகள் மேன்மேலும் வளர இறைவனை பிரார்த்திக்கின்றேன்.

***கலாநிதி தி.சிவகுமாரன்***
*M.Sc, Ph.D, FRSC, FCACB, DABCC*

காரைநகர் தங்கோடையைச் சேர்ந்த கலாநிதி தில்லைநாதன் சிவகுமாரன் கனடாவிலுள்ள காரைநகர் மக்கள் மத்தியில் உயர்ந்த கல்விமானாக விளங்குபவர். கனடாவின் சிறந்த பல்கலைக்கழகங்களுள் ஒன்றான மக்மாஸ்ரர் பல்கலைக்கழகத்தில் இரசாயனம்,உயிரியல் இரசாயனம் ஆகிய கல்வித் துறைகளில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவர். இங்குள்ள காரைநகர் மக்களின் அன்பிற்கும், மதிப்பிற்கும் உரியவராக விளங்கி அவர்கள் நடாத்துகின்ற கலை விழாக்கள் அரங்கேற்றங்கள் என்பவற்றிற்கு பிரதம விருந்தினராக அழைக்கப்பட்டு வருபவர்.

## திண்ணபுர அந்தாதியின் உரையினை கனடா சைவசித்தாந்த மன்றம் மறுபதிப்புச் செய்து வெளியிடவுள்ளது.

காரைநகர் கார்த்திகேயப் புலவரினால் இயற்றப்பட்ட திண்ணபுர அந்தாதியின் உரை தருமையாதீனப் புலவர் செஞ்சொற்கொண்டல் வித்துவான்.சொ.சிங்காரவேலன் அவர்களினால் எழுதப்பட்டு மூதறிஞர் தத்துவகலாநிதி.க.வைத்தீஸ்வரக் குருக்கள் அவர்களின் காரைநகர் தமிழ் வளர்ச்சிக் கழகத்தினால் 1985ஆம் ஆண்டு வெளியிடப்பட்டிருந்தது. திண்ணபுர சிவன் ஆலயத்தில் (ஈழத்துச் சிதம்பரம்) எழுந்தருளியிருக்கும் சௌந்தராம்பிகை சமேத சுந்தரேஸ்வரப் பெருமானின் மகிமையினை பக்திச் சுவை ததும்ப வெளிப்படுத்தும் 101 பாடல்களைக் கொண்ட இவ் அந்தாதியின் உரையினை மீள் பதிப்புச் செய்து வெளியிடும் பணியினை மேற்கொள்ள கனடா சைவசித்தாந்த மன்றம் முன்வந்துள்ளது. இந்நூலின் வெளியீட்டு விழா ஈழத்து சிதம்பர மண்டலாபிஷேக பூர்த்தியின் போது நடைபெறவிருப்பதுடன் கனடாவில் அறிமுகவிழா ஒன்றினையும் ஏற்பாடு செய்யவிருப்பதாக சைவசித்தாந்த மன்றத்தின் தலைவர் திரு.தி.விசுவலிங்கம் காரை ஒளிக்கு தெரிவித்தார்.

# ஒன்ராறியோ தமிழ் ஆசிரியர் சங்கம் நடாத்திய தமிழ் மொழித்திறன் போட்டிப் பரீட்சையில் பல காரைநகர் மாணவர்கள் சித்தி

ஒன்ராறியோவிலுள்ள கல்விச் சபைகளின் கீழ் இயங்குகின்ற சர்வதேச மொழிப்பிரிவில் கடமையாற்றும் தமிழ் ஆசிரியர்கள் இணைந்து ஏற்படுத்திக்கொண்ட அமைப்பே ஒன்ராறியோ தமிழ் ஆசிரியர் சங்கமாகும். இங்குள்ள பாடசாலைகளில் தமிழ்மொழிக்கல்வியை பயின்று வருகின்ற பாலர் கீழ்ப்பிரிவு தொடக்கம் தரம் எட்டு வரைக்குமான மாணவர்கள் மத்தியில் தமிழ் மொழித்திறன் காண் போட்டிப் பரீட்சைகளை வருடாந்தம் நடாத்தி பரிசில்கள் வழங்கி ஊக்குவிக்கும் பணி இச்சங்கத்தின் அடிப்படை நோக்கங்களுள் ஒன்றாக உள்ளது. அந்தவகையில் இவ்வாண்டிற்கான போட்டிப் பரீட்சைகளை வாசிப்பு, எழுத்தறிவு, எழுத்தினம் காணல், சொல்வதெழுதல் ஆகியனவற்றில் சென்ற மாதம் நடாத்தியிருந்தபோது ஆயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள் ஆர்வமுடன் பங்குபற்றியிருந்தனர். இப்பரீட்சைகளில் காரைநகரைச் சேர்ந்த பல மாணவர்கள் பங்குபற்றியதுடன் சித்தியும் பெற்று தமிழ்மொழி ஆர்வத்தினையும், மொழித்திறனையும் வெளிப்படுத்தியுள்ளனர். இவர்களையும், ஊக்குவித்த பெற்றோர்களையும் காரை ஒளி பாராட்டி வாழ்த்துகின்றது. எமக்கு கிடைக்கப்பெற்ற சித்தியடைந்த காரை மாணவர்களின் விபரங்களை கீழே பிரசுரிக்கின்றோம். இந்த விபரப்பட்டியலில் சிலரின் பெயர்கள் தவறவிடப்பட்டிருக்கலாம். அவற்றை எமக்கு அறியத்தந்தால் அடுத்த இதழில் நிச்சயமாகப் பிரசுரிப்போம்.

**சயந்தன் கணேசலிங்கம்** - பாலர் கீழ்ப்பிரிவு - சொல்வதெழுதல், வாசிப்பு, எழுத்தினம் காணல் 1ம் இடம்
**ராகுலன் செந்தூரன்** - பாலர் கீழ்ப்பிரிவு - எழுத்தினம் காணல் 1ம் இடம்
**வினுஜன் ஜெயரட்ணம்** - பாலர் கீழ்ப்பிரிவு - சொல்வதெழுதல், எழுத்தினம் காணல் 1ம் இடம்
**ஜனகன் செந்தூரன் -** பாலர் மேற்பிரிவு - சொல்வதெழுதல் 1ம் இடம்
**பிரணவன் விஜலிங்கம் -** பாலர் மேற்பிரிவு - எழுத்தறிவு 2ம் இடம்
**ராகுலன் ஜீவானந்தராஜா** - தரம் 1 - எழுத்தறிவு 1ம் இடம்
**சங்கர் ஜெயச்சந்திரன் - தரம் 2** - சொல்வதெழுதல் 2ம் இடம்
**பிரியங்கா கேதீஸ்வரன் தரம்1** - வாசிப்பு 2ம் இடம்
**ஆரண்யா செல்வராசா - தரம் 7** - சொல்வதெழுதல், எழுத்தறிவு, 1ம் இடம்
**தனுஷ்காந் யோகேஸ்வரன் தரம் 2** - சொல்வதெழுதல் 2ம் இடம் வாசிப்பு 1ம் இடம்
**மயூரா செந்தில்நாதன் - தரம் 4** - வாசிப்பு 1ம் இடம்
**நிஷாந்தி கணேசலிங்கம்-தரம் 5** - சொல்வதெழுதல் 1ம் இடம் வாசிப்பு 3ம் இடம் எழுத்தறிவு 2ம் இடம்.
**ஸ்ரீவர்ஷா ரஞ்சன் - தரம் 5** - எழுத்தறிவு 1ம் இடம்
**சாரங்கன் விக்கினேஸ்வரன்** - தரம் 6 - வாசிப்பு 1ம் இடம்

சித்தியடைந்தவர்களிற்கான பரிசில்களும் சான்றிதழ்களும் ஐயப்பன் ஆலய மண்டபத்தில் 11-06-2011ல் மாணவர்கள் பங்குபற்றிய கலைவிழா அரங்கில் வைத்து வழங்கப்பட்டிருந்தன.

# படங்களுடன் அமைந்த முதல் ஈழத்தமிழ் நாவல் காரையின் மைந்தன் அருணாசலம் நாகலிங்கத்தால் எழுதப்பட்டது.



படங்களுடன் அமைந்து வெளிவந்திருந்த முதலாவது ஈழத்தமிழ் நாவல் எனக் கருதப்படுகின்ற சாம்பசிவம்-ஞானாமிர்தம் என்ற காதல் நவீனத்தை இன்றைக்கு 84 ஆண்டுகளிற்கு முன்னர் எழுதிய பெருமை காரையின் மைந்தன் அமரர் அருணாசலம் நாகலிங்கம் அவர்களையே சேருகிறது. காரைநகர் இந்துக் கல்லூரியின் பழைய மாணவரான இவர் தனது 19வது வயதிலேயே மலேசியாவிற்கு புலம் பெயர்ந்து சென்று மலேசிய திறைசேரியில் எழுதுவினைஞராக பணியாற்றிய காலத்தில் இவரால் எழுதப்பெற்ற இந்நாவலிற்கு ஈழத்திலும், இந்தியாவிலும் இருந்த பிரபல்யம் மிக்க தமிழறிஞர்கள் மதிப்புரை வழங்கியிருந்தனர்.

காரைநகர் நாகமுத்துப் புலவர், சென்னை உயர்நீதிமன்ற சட்டத்தரணியாகவிருந்து பின்னர் சென்னை பல்கலைக்கழக பேராசிரியராகப் பணியாற்றிய ஆர்.பி.சேதுப்பிள்ளை, இந்து சாதனம் ஆசிரியராகவிருந்த திரு.ஆ.ஏ.திருஞானசம்பந்தபிள்ளை, யாழ்ப்பாணம் சரிதம் ஆசிரியர் முதலியார் C.இராசநாயகம், சென் பற்றிக்ஸ் கல்லூரி தலைமை ஆசிரியராகவிருந்த திரு.V.S.இராசஐயனார் ஆகிய அறிஞர்களே மதிப்புரை வழங்கி சிறப்பித்தவர்கள ஆவர்.

சென்னையிலிருந்து வெளிவந்துகொண்டிருந்த பல தமிழ் நாளிதழ்களும் கோலாலம்பூரிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த கலாதீபம், தமிழ்நேசன் ஆகிய நாளிதழ்களும் நாகலிங்கத்தின் நாவல் குறித்த சிறப்பான விமர்சனங்களை 1928ம் ஆண்டு வெளியிட்டிருந்தன.

1947ம் ஆண்டு மலேசியாவிலிருந்து காரைநகருக்கு திரும்பிய அமரர் நாகலிங்கம் தமது மனைவி பிள்ளைகளுடன் சம்பந்தர்கண்டியிலிருந்த தமது இல்லத்தில் வசித்து வந்தார். சம்பந்தர்கண்டி நாகலிங்கம் என்றே காரை மக்களால் நன்கு

அறியப்பட்டிருந்த இவர் தமது இறுதிக்காலம் முழுவதையும் ஈழத்துச் சிதம்பரத்தின் வளர்ச்சிப் பணியில் செலவழித்தார். 1968ஆம் ஆண்டு இவ்வாலயம் கருங்கற்களால் புனரமைக்கப்பட்டபோது அமரர் நாகலிங்கம் அவர்களே திருப்பணிச்சபையின் செயலாளராக பதவிவகித்தவர் என்பதுடன் இவரது நாவல் விற்பனை மூலமாக பெறப்பட்ட பணத்தை இவ்வாலயத்தின் திருக்குளத்தை புனரமைக்க செலவு செய்திருந்தவர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

படங்களுடன் அமைந்த ஈழத்தின் முதல் தமிழ் நாவலை எழுதிய சாதனையாளர் என்ற வகையிலும், காரைநகரில் பல சமய, சமூக சேவைகளில் ஈடுபட்டிருந்தவர் என்ற வகையிலும் அமரர் நாகலிங்கம் குறித்த தகவல்கள் எதுவும் இதுவரை வெளிவந்த நூல்கள் எதிலும் இடம்பெறவில்லை என்பதுடன் 84ஆண்டுகள் கழித்து வெளிவந்திருந்தமை காரைநகர் மக்களால் சிந்திக்கப்படவேண்டிய ஒன்றாகும். இவரைப் போன்ற பல சாதனையாளர்களும்,சேவையாளர்களும் இன்னும் மறைந்திருக்கலாம்.
இல்லறம் முதலாக காதலின் வெற்றி வரைக்குமான பதினேழு முக்கியமான விடயங்கள் பிரதிபலிக்கபட்டுள்ள பயனுள்ளதும், இன்பம் பயப்பதுமான 360 பக்கங்களைக் கொண்ட இந்நாவலை மறுபிரசுரம் செய்து வெளியிட தமிழ் ஆர்வலர்கள் அல்லது அமைப்புக்கள் முன்வர வேண்டும் என்பது பலருடைய விருப்பமும் எதிர்பார்ப்புமாகும்.

## முத்துக்கு முத்தாக............

காலத்தின் தேவையை உணர்ந்து ஒரு கடமையை ஆற்ற வந்தவர்கள் நாங்கள்.
அன்று ஈஸ்டர் விடுமுறை. வீட்டில் குழந்தைகளுடன் சும்மா இரு என்றது மனது. தினமும் மைல் கணக்காக கார் ஓடி கதவை தட்டி வீட்டைக் காட்டி என்ன! ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கும் மகாநதியைப் போல சோம்பலின்றி இயங்கிக்கொண்டிருந்து தான் என்ன? ஓடினால் தான் அது நதி.வீசினால் தான் அது காற்று. பாடினால் தான் அது குயில். பாடுபட்டு உழைத்தால் தான் அது மனிதம். உழைக்காமல் உண்ணும் உணவு திருட்டுக்கு சமம் என்கிறது கீதை. உலகின் புகழ் பெற்ற மனிதர்களாக கருதப்படும் லெனின் சர்ச்சில் வால்டேர் போன்றோர் சாகும்வரை சும்மா இருந்ததில்லை. எழுதியே பெரும் பணம் குவித்தவர் சர்ச்சில்.
எட்டு மணி நேர வேலை எட்டு மணிநேர ஓய்வு எட்டு மணி நேர உறக்கம் என்ற எழுதப்படாத நியதிக்குள் வாழ்க்கை வண்டிச்சக்கரமாய். சும்மா இருந்து தான் என்ன செய்ய! வீட்டை ஒரு சுற்று சுற்றி வர
முத்துக்கு முத்தாக............சிடி யன்னல் கதவோடு நின்று கைகாட்டியது.
சினிமா ஒரு கலையாக தொழிலாக வியாபாரமாக முப்பரிமாணம் கொள்ளும் ஆற்றல் பெற்றது. நோய் தீர்க்கும் மருந்து விற்பதும் உயிர் வளர்க்க உணவு தருவதும் வியாபாரமே.
எனக்கும் சினிமாவிற்கும் வெது தூரம். ரசித்துப் பார்த்த படங்களை பட்டியலிட்டு விடலாம். தவமாய் தவமிருந்து பிரிவோம் சந்திப்போம ஒன்பது ரூபாய் நோட்டோடு முத்துக்கு முத்தாக................
யாழ்ப்பாணம் கல்லுரியில் படித்திருந்தால் சேனாதிராஜா மாஸ்டர் பஸ்ஸில் கூட்டிப்போய் காட்டி இருப்பார். ராஜ ராஜசோழன் அவர் கூட்டிப்போனது தான். பக்திப் படங்கள் என்றால் பள்ளிக்கூடமாக போவோம்.
இன்று திரைக்கு வரும் பெரும்பாலான தமிழ் சினிமாக்களோடு ஒப்பிடுகையில் முத்துக்கு முத்தாக........ காலத்தின் நியதி. பாகப்பிரிவினை பாசமலர் போன்ற குடும்ப உறவுகளை பேசும் படங்களையோ கர்ணன் வீர பாண்டிய கட்ட பொம்மன் போன்ற நாட்டுப்பற்றை ஊட்டும் படங்களையோ மக்களுக்குத் தரும் மனோநிலை வெகு சிலருக்கே இருக்கிறது.
ஒரு தவமாய் தவமிருந்து ஒரு முத்துக்கு முத்தாக ஒரு ஆறிலிருந்து அறுபது வரை என்று 12 வருடங்களுக்கு ஒரு முறை தான் குறிஞ்சிப் பூவாக பூக்கிறது. மண் வாசைன மணக்க வாழ்க்கைப் போராட்டங்களைக் கலைத்தன்மை சிதையாமல் அப்படியே திரையில் வடித்துக் கொடுத்திருக்கிறார்கள்.
முதுமை! அழுத கண்ணீரும் ஆறாத ரணமுமாய், அநாதைகளைப் போல. பணமே! இன்றைய புதிய பொருளாதாரத்தின் பூபாளமாகி விட்டது. பாசம் நிறைந்த நெஞ்சம் பாறைகளாகிப் போகட்டும். சுயநலமே கூடு கட்டி வாழட்டும். காற்று எப்போதும் ஒரே திசையில் வீசாது.
செடிகள் மலர்களையும் மரங்கள் பழங்களையும் உதிர்த்துவிடும். காவோலை விழ குருத்து ஓலை........ இளமையின் மலர்ச்சி முதுமையின் தளர்ச்சியில் முடிந்து போகும். வாழ்க்கையில் வயோதிகம் கொடுமையானது. கொடிது கொடிது இளமையில் வறுமை என்ற ஔவையே வயோதிகம் உன் கண்களுக்கு ஏன் எட்டாமல் போனது.
குழந்தைகளுக்கு மட்டுமல்ல முதியவர்களாலும் தாங்கிக்கொள்ள முடியாது. எதை? ..............!!! உங்களுக்கு வேண்டும் வரமா? சாபமா?
மண்வாசம் வீசும் ஊரு எங்க ஊரு..............!
எங்காத்தா ஒரு கோவில், எங்கப்பா அதில் சாமி,!
இது தானே எங்களோட பூமி!
நன்றி!



கணபதிப்பிள்ளை ரஞ்சன்,
பிறம்றன் கனடா.

### எனது பெற்றோர்

எனது பெற்றோர் நான் கண்ட முதற் தெய்வங்கள். அவர்கள் என்மீது அளவில்லாத அன்புடையவர்கள். எனக்கு தேவையான உதவிகளை செய்வார்கள். என்னை பாடசாலைக்கு கூட்டிச் செல்வார்கள். நான் பாடம் கற்க உதவி செய்வார்கள். என்னுடன் சேர்ந்து வலைப்பந்து விளையாடுவார்கள். எனக்கு விருப்பமான நல்ல உணவுகளை செய்து தருவார்கள். எனக்கு விருப்பமான உடைகளையும் வாங்கித் தருவார்கள். இலங்கை, இந்தியா, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளுக்கு என்னைக் கூட்டிச் சென்று அங்குள்ள இடங்களை காண்பித்தார்கள். நான் பார்த்து மகிழ்ந்த இடங்களை என்றும் என்னால் மறக்க முடியாது.



**நிதுஷா பரமானந்தராஜா**
**வகுப்பு 2**

### யானை

நிலத்தில் வாழும் மிருகங்களில் யானைதான் மிகவும் பெரியது. யானை ஒரு காட்டு மிருகம். அதுஒரு பலமான மிருகம். யானைக்கு ஒரு தும்பிக்கையும் இரண்டு தந்தந்தங்களும் உள்ளன. யானையின் தும்பிக்கையில் எலும்புகள் இல்லை. யானைகள் சராசரி 80வருடங்கள் வரை வாழக்கூடியன. யானையைப் பழக்கி பாரம் தூக்கும் வேலையை செய்விப்பர். யானைகள் கூட்டமாக வாழும் பழக்கத்தை கொண்டவை. யானை கருவுற்று குட்டி போட 22மாதங்கள் வரை செல்லும். யானைக்கு மிகவும் பிடித்தமான உணவு கரும்பு. யானைக்கு கிட்டப்பார்வை மட்டும் தான் உள்ளதாம்.



யானையை மிருகக்காட்சிச் சாலையில் பார்க்கலாம். யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே.

**நிஷாந்தி கணேசலிங்கம்**
**வகுப்பு 5**

### காரைநகர்.

அப்பாச்சி டடி தாத்தா பாட்டி சித்தப்பா அப்பா அம்மா எல்லோரும் பிறந்து வளர்ந்த ஊர். அப்பாச்சி அப்பா அடிக்கடி ஊரைப்பற்றிக் கதைப்பினம். எனக்கு ஒன்றுமே தெரியாது. அவர்கள் கதைகளிலிருந்து நானாக ஒரு கற்பனையை கனவை வளர்த்துக்கொண்டேன். 2010 யூன் மாதம் என் கனவு நனவானது.

நல்லூர் அம்மம்மா வீட்டிலிருந்து வான்பிடித்து பயணமானோம். ஒரு மணி நேரத்தில் பொன்னாலை பாலத்தை கடந்து காரைநகரில் காலடிவைத்தோம். அப்பா எனக்கும் தம்பிக்கும் விபரமாக எல்லாவற்றையும் சொல்லிக்கொண்டு வந்தார். முதலில் நாங்கள் போனது மணற்காடு முத்துமாரி அம்மன் கோயில். அப்பா அழுதபடியே கோயிலை நோக்கி ஓடினார். கோயிலில் சனம் இல்லை. சம்பந்தர் ஐயர் உள்ளே இருந்து வந்து அப்பாவுடன் கனநேரம் கதைத்தார். நானும் தம்பியும் கோயிலை சுற்றிப்பார்த்தோம். அம்மனுக்கு அபிஸேகம் நடக்கும் பொழுது தீர்த்தம் வருவது இளநீர் கோம்பையில் பிடித்து குடிப்பது தேங்காய் உடைத்து சாப்பிடுவது திருவிழாவில் மீசை வைப்பது என அப்பா ஒரே கதையாக சொன்னார்.

வெய்யில் சரியான கூட. அப்பா படித்த யாழ்ற்றன் கல்லூரி பார்த்தேன். எல்லாம் திறந்த கிளாஸ் ரூம். நிறைய பிள்ளைகள். கனடாபோல வசதிகள் கிடையாது. ஊத்தையாக கூட இருந்தது. காரைநகர் றோட்டுகள் நல்லாக இல்லை. வான் ஏறி விழுந்து விழுந்து தான் போனது. எனக்கும் தம்பிக்கும் ஒரே சிரிப்பு தான். எல்லாம் அப்படியே புதுசா வரும். மீன் வெரி விரஸ். கசூரினா பீச். நல்ல மண். நான் தம்பி அந்த மண்ணில் ஓடி விளையாடினோம். அப்பா கிணறு கிண்டிக்காட்ட நானும் தம்பியும் அப்படியே கிண்டினோம். அலை வந்து மூடும். தண்ணி ரூ சோல்டி. ஒரே உப்பு! தூ! கண் எரியும்! நுங்கு குடித்தோம். பனைமரத்திலிருந்து வெட்டி யாரோ கொண்டுவந்தார்கள். வெரி ரேஸ்ரி! ஐ லைக் தற் ஸோ மச்!'. அப்பாவிற்கு தெரியும் அவரை! சனங்கள் வெரி புவர். பாவம்! வெளிச்சவீடும் பார்த்தோம். வெரி ஓல்ட். திருத்த வேணும். எல்லா வீடும் பழுதாப்போய்க்கிடந்தது. வீட்டில் யாரும் இல்லை. ஆடு மாடு தான்.நாய்கள் நிறைய நிக்குது. இன்னும் நிறைய இடம் போனோம். சோமு தாத்தா வீடு வாரிவளவு. பிள்ளையார் கோயில். சிவன் கோயில். பெரிய கோயில். அப்பா அப்ப இல்லை.

காரைநகர் நல்ல இடம். ஐ லைக் தற் பிளேஸ் சோ மச்.

நுளம்பு இல்லாட்டி இன்னும் நல்லம்!!!



**ஸ்ரீ வர்ஷா ரஞ்சன்**
**வகுப்பு 5**

## சிறுவர் அரங்கம்

### தமிழுக்கு அமுதென்று பெயர்

எங்கள் கனடா-காரை கலாச்சார மன்றமும் அதன் தமிழ்ப் பணியும் என்றும் காரை மக்கள் மனதில் நிலைத்திருக்கும். நான் மன்றத்தினால் ஆண்டு தோறும் நடத்தப்பட்டு வரும் தமிழ்மொழித் திறன் போட்டிகளில் 2006 ஆம் ஆண்டில் இருந்து பங்கு பற்றி பரிசில்கள் பெற்றுள்ளேன்.

பாடசாலையில் ஏழாம் வகுப்பில் அனைத்துலக வணிகத் தொழில்நுட்பக் கற்கை நெறியில் கல்வி கற்று வருகின்றேன். எனது ஐந்தாவது வயதில் தமிழ்ப் பள்ளிக்குச் சென்று தமிழ்மொழியைக் கற்க ஆரம்பித்தேன். தற்போது வளர்நிலை 5 இல் தமிழ்மொ ழியைப் பயின்று வருகின்றேன்.

தமிழ்க் கலை தொழில் நுட்பக்கல்லூரி, முதறிஞர் கந்தமுருகேசனார் தமிழ்ப் பண்பாட்டு மன்றம் ஆகியவற்றினால் ஆண்டு தோறும் நடத்தப்பட்டுவரும் பேச்சு, வாசிப்பு, சொல்வதெழுதல், திருக்குறள் போட்டிகளில் பங்கு பற்றி பரிசில்கள் பெற்றுள்ளேன். மேற்படி மன்றங்களினால் நடத்தப்பட்டு வரும் கலை நிகழ்ச்சிகளில் தமிழ் மொழி சார்ந்த பட்டி மன்றம், தமிழிசை, நாடகம், உரை என்பவற்றில் பங்கு பற்றியுள்ளேன்.

" யாம் அறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம் " என்றார் பாரதியார். நான் எனது தாய் மொழியாகிய தமிழைக் கற்பதில் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். கனடா-காரை கலாச்சார மன்றத்தின் தமிழ்ப்பணி இனிதே தொடர தமிழ்த் தாயை வேண்டுகின்றேன்.



**செல்வி. மதுரா சோதிநாதன்**

### நாம் ஏன் தமிழ் கற்க வேண்டும்

நாம் தமிழர், எமது தாய்மொழி தமிழ். இன்று நாங்கள் தமிழைக் கற்றால்தான் நாளை எமது தலைமுறையும் தமிழைக் கற்கமுடியும். தமிழன் என்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா. நாம் தமிழைக் கற்பதினால் எமது இனம், மொழி, அடையாளம், பண்பாடு, கலை என்பனவற்றை பேணி வளர்க்க முடியும். எமது மொழியை இழந்தால் இழப்பதற்கு எதுவுமில்லை என்று ஆகிவிடும். எனவே என்போன்ற இளம் சிறார்கள் கட்டாயமாக எம் தமிழ்மொழியைக் கற்க முன்வரவேண்டும். இளமையில் கல்வி சிலையில் எழுத்து.



**கார்த்திக் விக்கினேஸ்வரன் வகுப்பு 6**

# காரைநகரும் விளையாட்டுத் துறையும்

மாவளம் நிறைந்த காரைநகர் மக்கள் பழமைக்கு பழமையாயும் புதுமைக்கு புதுமையாயும் தாம் பிறந்த பூமிக்கு புகழ் தேடித் தந்தார்கள். காரைநகரில் தோன்றி மறைந்து புகழ் சேர்த்த பெருமக்கள் வரிசையில் விளையாட்டுத் துறையில் ஈடுபட்டோரும் உள்ளனர்.

பாலர் கல்வி முதல் பல்கலைக்கழகம் வரை உடற்கல்வியின் முக்கியத்துவம் உணரப்பட்டு கல்விமுறையில் சிறப்பான வகிபாகத்தை உடற் கல்வி பெற்றுள்ளது. உடற்கல்வி மாணவர்களின் ஆளுமையை செம்மைப்படுத்தி, செழுமைப்படுத்தி, வாழ்க்கையின் பல்வேறு கட்டங்களிலும் எதிர்கொள்ளும் சவால்களுக்கு முகம் கொடுக்கத் தேவைப்படும் பக்குவத்தையும், பயிற்சியையும் வழங்குகின்றது. மாணவர்களின் சமநிலை ஆளுமை வளர்ச்சியுற இது அத்திவாரமாக அமைகின்றது.

இளைஞர்களின் சிந்தனை செயல்கள், வழி தவறி செல்லாமல் மாலை வேளைகளில் பயன்தரு செயல்களில் ஈடுபட விளையாட்டு வழி அமைக்கின்றது.

விளையாட்டில் ஈடுபடுவோர் உடல் வலிமை பெறல் மாத்திரமன்றி சகவீரர்களுடன் சேர்ந்து இயங்கி தன் அணியின் வெற்றிக்கு உழைக்கும் மனப்பான்மை, மதிநுட்பத்துடன் செயற்படல், மனக்கலக்கம் இன்றி செயலை எதிர் கொள்ளல், கலக்கமற்ற வீரம் போன்ற நற்பண்புகளை உருவாக்கும் களமாக விளையாட்டு மைதானங்கள் திகழ்கின்றன.

நமது இளைஞர்கள் மாலை வேளைகளில் கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலயம், யாழ்ற்ரன் கல்லூரி, [..] புத்திநாயனார் வித்தியாலயம், வியாவில் சைவ வித்தியாலயம் ஆகிய பாடசாலைகளின் விளையாட்டு மைதானங்களிலும் தரவை, [..] பூத்தி கேணியடி, மருதடி விரகத்தி விநாயகர் ஆலய வீதி, சடையாளி, நீலிப்பந்தனை சனசமூக நிலையம், கேசடை வீதியில் [..] வயல்வெளி, வாரிவளவு கற்பக விநாயகர்வீதி, கோவளம் விளையாட்டு மைதானம், சிவகாமி அம்மன் கோவிலடி, வியாவில் சனசமூக நிலையம், தோப்புக்காடு போன்ற இடங்களிலும் விளையாட்டில் ஈடுபடுவர்.



1920ம் ஆண்டுகளில் யாழ்ப்பாண மாவட்டத்தில் விளையாட்டில் உயர் அந்தஸ்தை பெற்று இருந்த ஆசிரியர் அப்பாக்குட்டி சுந்தரம்பிள்ளை (சிவன் கோவிலடி) அவர்களால் காரை விளையாட்டுக் கழகம் ஆரம்பிக்கப்பட்டது. கெப்டன் தர்மரத்தினம் அவருடைய சகோதரர் கனகரத்தினம் (புது றோட்டு) ஆகியோர் இப்பணியில் இணைந்து பணியாற்றினர். காரை இந்துக் கல்லூரியின் பழைய மாணவர் சங்கம், மலாய் நாட்டில் சேவையாற்றி ஓய்வூதியம் பெற்று காரைநகரில் வாழ்ந்தவர்கள், காரைவாழ் வர்த்தகப் பெருமக்கள் கழகத்திற்கு பொருளுதவி வழங்கினர்.

[..] காலப்பகுதிகளில் தரவை மைதானம் விளையாட்டு நிகழ்வுகளுக்காக பயன்படுத்தப்பட்டது. காரைநகரின் சகல குறிச்சி இளைஞர்களும் மாலை வேளைகளில் இங்கு வந்து சேருவர். சனி, ஞாயிறு விடுமுறை தினங்களில் [..]வட்ட பாடசாலைகளில் கல்வி பயிலும் மாணவர்களும் இங்கு வந்து [..] யாழ்ப்பாணத்தில் உள்ள பிரபல கல்லூரிகள், கழகங்களுடன் [..] விளையாட்டுக் கழகம் உதைபந்தாட்டப் போட்டியில் [..]றியது. 1933இல் சென்பற்றிக்ஸ் (St.Patrick's League) கழகத்தினரால் [..]தப்பட்ட உதைபந்தாட்ட போட்டிகளில் கழகம் பங்கு கொண்டது. [..] மாவட்ட உதைபந்தாட்ட தெரிவு அணியில் காரை விளையாட்டு கழக [..]ர்கள் இடம் பெற்றனர்.

யாழ் மாவட்ட பிரபல பாடசாலைகளின் உதைபந்தாட்ட [..]ணியில் காரைநகர் வீரர்கள் முன்னணியில் இருந்தனர். 1933 – 1945ம் [..]ண்டு காலப்பகுதியில் காரை விளையாட்டுக் கழகம் யாழ்ப்பாண உதைபந்தாட்டத்தில் செல்வாக்கு பெற்றிருந்தது.

ஒரு காலகட்டத்தில் அமரர்கள் செல்வரத்தினம் (மாப்பாணவூரி) தர்மரத்தினம், கனகரத்தினம் (புது றோட்டு) சீவரத்தினம் (கோவளம்) நவரத்தினம் (மல்லிகை) காரை விளையாட்டுக் கழக உதை பந்தாட்ட அணியில் விளையாடியமையால் "இரத்தினங்கள் அணி" எனவும் அழைக்கப்பட்டது. அமரர் F.X.C. நடராஜா அவர்கள் Fullback நிலையில் விளையாடினார்.

அமரர் சண்முகம் சுந்தரசிவம் (மருதடி) யாழப்பாணஐக்கிய விளையாட்டுக் கழகத்தின் துடுப்பாட்ட வீரர் திரு. ஆறுமுகம் இரத்தினகோபால் (புது றோட்டு) 1954இல் சென்னை அணியுடன் போட்டியிட்ட யாழ் மாவட்ட அணித் தலைவர், யாழ்ப்பாண விக்டோரியன் கழகத்தின் அணித் தலைவர் யாழ்ப்பாண இந்துக் கல்லூரியின் பயிற்றுனராக பத்து ஆண்டுகள் பணியாற்றி கல்லூரிக்கு பல வெற்றிகளை தேடிக் கொடுத்தவர். காரை இந்துக் கல்லூரி, காரை விளையாட்டுக் கழகம், சோலையான் விளையாட்டுக் கழகம், கோவளம் விளையாட்டுக் கழகம் ஆகியவற்றின் பயிற்றுவிப்பாளர். யாழ்ப்பாண மாவட்டத்தில் உதைபந்தாட்டத்தில் சிறப்பான இடத்தை வகித்தவர். திரு.A.K.நடராஜா (மாப்பாணவூரி) விக்டோரியின் அணியில் இடம் பெற்று Ceylon Football Assoccation நடாத்திய போட்டிகளில் பங்குபற்றியவர். அமரர் செல்லப்பா சுப்பிரமணியம் (மருதடி) காரை விளையாட்டுக் கழகத்தின் சிறந்த முன்னணி வீரர். நொத்தாரிசு க.மு.தர்மராஜா சிறந்த கோல் காப்பாளர். அமரர் ஆ.குமாரசாமி உதைபந்தாட்ட போட்டிகள் ஓட்டப் போட்டிகளில் கல்லூரிக் காலங்களில் பங்குபற்றியவர். சென்னை Y.M.C.A கல்லூரியில் உடற்கல்விப் பயிற்சிநெறி பயிலும் போது Y.M.C.A அணியின் உதைபந்தாட்ட வீரர் காரைநகர் இந்துக் கல்லூரி விளையாட்டுத் துறை ஆசிரியராக கடமை ஆற்றியவர்.

1960களில் மலேசியாவில் இருந்து வருகை தந்த திரு. நல்லையா பொன்னையா (மாப்பாணவூரி) காரை விளையாட்டுக் கழகத்தை மீண்டும் இயக்கினார். கழகத்தின் செயற்பாடுகளுக்கு பொருளுதவி வழங்கி பலம் மிக்க உதைபந்தாட்ட அணியை உருவாக்கினார். கழகத்தின் உதைபந்தாட்ட அணித்தலைவராக இருந்து கழகத்தின் வெற்றிக்கு காரணமாயிருந்தார்.

1970களில் திரு. நவரத்தினம் தருமராஜா (மல்லிகை) பொருளுதவி வழங்கினார். திரு. தர்மராஜா உதைபந்தாட்ட, கரப்பந்து, துடுப்பாட்ட அணிகளுக்கு தலைமை தாங்கினார். இக்காலகட்டத்தில் கழகம் நெடுங்கேணி பிரிவுக்கு விளையாட்டு நிகழ்வுகளில் பங்குபற்றுவதற்காக சுற்றுலாவை மேற்கொண்டது.

1979ஆம் ஆண்டு காரை விளையாட்டுக் கழகம் நிறுவனமயப்படுத்தப்பட்டது. கழகத்திற்கு நிருவாகம், வங்கிக் கணக்கு, இலச்சனை, கொடி, யேர்சி (JERSEY) என்பன உருவாக்கப்பட்டன. 20.10.1979இல் காரை விளையாட்டுக் கழகத்திற்கு தேவையான நிதியை உருவாக்குவதற்காக தீபாவளிச் சிறப்பிதழ் ஒன்று கலை நிகழ்வுகளுடன் நடராஜா ஞாபகார்த்த மண்டபத்தில் பிரதம அதிதி சட்டத்தரணி ந. சிறிகாந்தா அவர்களினால் வெளியீட்டு வைக்கப்பட்டது. கழகத்தின் போஷகர்களாக காரை இந்துக் கல்லூரி, யாழ்ப்பரன் கல்லூரி உடற்கல்வி ஆசிரியர்கள் திரு. அ. சோமஸ்கந்தன், திரு. அ. தியாகராஜா, வேதர் அடைப்பைச் சேர்ந்த கொழும்பு பிரபல வர்த்தகர் திரு. செ. பரம்சோதி ஆகியோர் தெரிவு செய்யப்பட்டனர். இச்சிறப்பிதழ் வெளியிடுவதற்கான விளம்பரங்களை கழகத்தின் போஷகர் திரு. செ. பரம்சோதி பெற்றுத் தந்தமை குறிப்பிடத்தக்கது.

1970இன் பிற்பகுதிகளில் காரை விளையாட்டுக் கழகத்தின் மீள் எழுச்சியும், செயற்பாடுகளும் காரைநகரில் பல விளையாட்டுக் கழகங்களின் தோற்றத்திற்கும், விளையாட்டு நிகழ்வுகள் சுறுசுறுப்பு அடையவும், காரணமாயிற்று. இக்காலகட்டத்தில் காரைநகர் கழகங்களுக்கிடையே உதைபந்தாட்ட, கரப்பந்து, துடுப்பாட்ட போட்டிகள் ஆரோக்கியமான சூழலில் நடைபெற்றது. களபூமி சனசமூக நிலைய இளைஞர்கள் காரை விளையாட்டுக் கழகத்துடன் இணைந்து செயற்பட்டமை காரை விளையாட்டுக் கழகம் பல வெற்றிகளை பெறவும் ஸ்திரமான செயற்பாட்டிற்கும் உறுதுணையாயிற்று.

காரை விளையாட்டுக் கழகம், ஊர்காவற்துறை, அராலி, யாழ்ப்பாணம் பண்டதரிப்பு ஆகிய இடங்களில் நடாத்தப் பெற்ற சுற்றுப் போட்டிகளில் பங்குபற்றியது. அதே வேளை சிநேக பூர்வ போட்டிகளிலும் பங்கு பற்றியது. ஊர்காவற்றுறை உதவி அரசாங்க பிரிவில் விளையாட்டு அமைச்சின் ஆதரவுடன் நடைபெற்ற விளையாட்டுப் போட்டிகளிலும் 'பாலா பிறதர்ஸ்' தீவுப் பகுதி கழகங்களுக்கிடையில் நடாத்திய போட்டிகளிலும் பங்குபற்றியது. 'பாலா பிறதர்ஸ்' ஸ்தாபனத்தால் நடாத்தப்பட்ட மென்பந்து கிரிக்கெட் போட்டியில் வெற்றியீட்டி 'சீவலி டயறி' வெற்றிக் கேடயத்தை சுவீகரித்துக் கொண்டது.

வாரிவளவு நல்லியக்க சபையினரால் ஒழுங்கு செய்யப்பட்ட 14 விளையாட்டு நிகழ்வுகளில் 13 வெற்றிக் கேடயங்களையும் உதைபந்தாட்ட இறுதிப் போட்டியில் காரை விளையாட்டுக் கழக A, B அணிகள் பங்குபற்றி 1ம், 2ம் இடங்களையும் பெற்றது. தீபாவளி தினத்தன்று காரைநகர் கடற்படையும் காரை விளையாட்டுக் கழகமும் பங்குபற்றும் உதைபந்தாட்ட போட்டி ரசிகர்கள் மத்தியில் மிகவும் பிரபல்யம் பெற்றது.

காரைநகரில் இயங்கும் விளையாட்டுக் கழகங்களில் இருந்து தெரிவு செய்யப்பட்ட வீரர்களை கொண்ட அணி இக்காலத்தில் காரைநகருக்கு வெளியே நடைபெற்ற போட்டிகளில் பங்குபற்றியமை சிறப்பம்சமாகும். 1991ஆம் ஆண்டு இடப்பெயர்வின் போது காரை விளையாட்டுக் கழகம் அனைத்து உடமைகளையும் இழந்தமையும், அங்கத்தவர்கள் பல்வேறு இடங்களிலும் வாழ்கின்றமையும் காரை விளையாட்டுக்கழகத்தை செயற்படாநிலைக்கு தள்ளியது. கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய விளையாட்டுப் போட்டிக்கு காரை விளையாட்டுக் கழகத்தால் எடுக்கப்பட்ட முயற்சியின் பயனாக அமரர்களான விளையாட்டு வீரர்கள் விளையாட்டுத்துறை ஆர்வலர்கள் ஞாபகார்த்தமாக காரை விளையாட்டு கழக அங்கத்தவர்கள் அமரர்களான வீரர்கள் ஆர்வலர்களின் உறவினர்களால் 87,000 பெறுமதியான சுழல் வெற்றிக் கேடயங்கள் பதினெட்டும் வீரர்களுக்கான இருபத்து மூன்று வெற்றிக் கிண்ணங்களும் வழங்கப்பட்டது. அன்னார்களின் பங்களிப்பு தொடர்பான துண்டுப் பிரசுரமும் வழங்கப்பட்டது. கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய உதைபந்தாட்ட அணிகளுக்கான (Jersey) 65,000/= பெறுமதியான யேர்சி வழங்கப்பட்டது. காரை விளையாட்டுக் கழகத்தை இயக்குவதற்கான சிந்தனைகள் செயற்றிட்டங்கள் இருப்பினும் இயக்குவதில் சிரமங்கள் தென்படுகின்றன. காரைநகர் விளையாட்டுத்துறை அபிவிருத்திக்கான முன்மொழிவுகள் காரை விளையாட்டுக் கழகத்திடம் இருப்பதால் எதிர்காலத்தில் பணிகள் ஆரம்பிக்கும் சாத்தியம் உண்டு.

1930 - 1937ஆம் ஆண்டு வரைக்கும் சித்திரை பாடசாலை விடுமுறை காலத்தில் அகில காரைநகர் மெய்வல்லுனர் போட்டிகள் நடைபெற்றன. இப்போட்டிகளில் காரைநகரின் சகல பகுதிகளிலும் வாழ்ந்த மக்களும் உயர்கல்விக்காக யாழ்நகரின் பிரபல பாடசாலைகளில் கல்வி கற்ற காரைவாழ் மாணவர்களும் மிக்க ஆர்வத்துடன் பங்குபற்றினர். இப்போட்டிகளை நடாத்துவதில் பெரும் பங்காற்றியவர் நடுத்தெருவைச் சேர்ந்த அமரர் திரு. நா. பொன்னம்பலம். காரை இந்துக் கல்லூரியின் பழைய மாணவர் சங்கத்தை உருவாக்கியவர். இவருடன் சேர்ந்து உழைத்தவர் மொறக்கோ சுப்பிரமணியம் எனப் போற்றப்பட்டு வந்த களபூமி K.K.சுப்பிரமணியம் அப்புக்காத்தர். திரு. நா. பொன்னம்பலம் காரை இந்துக் கல்லூரியின் பழைய மாணவர் சங்கத்தின் முதற் செயலாளர். அரச சேவையில் எழுதுவினைஞராக சேர்ந்து கணக்காளராகக் பதவி உயர்வு பெற்றவர்.

## தோப்புக்காடு விளையாட்டுக் கழகம்

தோப்புக்காடு கிராமத்தில் பல குழுக்களாக விளையாட்டில் ஈடுபட்டு இருந்த இளைஞர்கள் தமது கிராமத்து விளையாட்டு நிகழ்வுகளை முன்னெடுத்துச் செல்வதற்காக 30.11.1979இல் தோப்புக்காடு இளைஞர் விளையாட்டுக் கழகத்தை ஆரம்பித்தனர். நாளடைவில் ஆர்வலர்கள் சமூகப் பிரதிநிதிகள், பெண்களை கழகத்தில் இணைத்துக் கொள்வதற்காக தோப்புக்காடு விளையாட்டுக் கழகம் என மாற்றமடைந்தது. ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர் பிரிவில் நடாத்தப் பெற்ற விளையாட்டு நிகழ்வுகளில் பங்குபற்றி வெற்றியீட்டியது. இப்பிரிவில் எல்லே விளையாட்டு நிகழ்விற்கான வெற்றிக் கேடயத்தை தொடர்ந்து பல ஆண்டுகளாக தோப்புக்காடு விளையாட்டுக் கழகம் தனதாக்கிக் கொண்டது. இக்காலப்பகுதியில் காரைநகரில் இயங்கிய விளையாட்டுக் கழகங்கள், கடற்படை அணி, இலங்கை போக்குவரத்துச் சபை அணிகளுடன் உதைபந்தாட்டப் போட்டியில் கலந்து கொண்டது. காரைநகர் தெரிவு அணியிலும் தோப்புக்காடு விளையாட்டுக் கழக வீரர் இடம் பெற்றனர்.

1985ஆம் ஆண்டு இடம்பெயர்ந்து இப்பிரதேச மக்கள் வட்டுக்கோட்டையில் வாழ்ந்து கொண்டு இருக்கும் பொழுது வலிகாமம் மேற்கு பிரிவில் நடைபெற்ற உதைபந்தாட்ட போட்டிகளில் பங்கு பற்றி வெற்றிக் கேடயங்களைப் பெற்றுக் கொண்டனர். மேலும் யாழ் மாவட்ட முன்னணி விளையாட்டுக் கழகங்கள் திருமலை நட்சத்திர விளையாட்டுக் கழகம் ஆகியவற்றுடன் உதைபந்தாட்ட போட்டியில் பங்குபற்றினர்.

தோப்புக்காடு கிராமத்தினர் மீளக்குடியமர்ந்த பின்னர் காரைநகர் உதவி அரசாங்க பிரிவினால் நடாத்தப் பெற்ற விளையாட்டு நிகழ்வுகளில் பங்குபற்றி பரிசில்களை பெற்றுள்ளனர். இக்கிராம மக்கள் உறுதியான வாழ்வாதாரமின்றி தம் வாழ்க்கையை நடாத்திக் கொண்டு இருக்கிறார்கள். தோப்புக்காடு விளையாட்டுக் கழகம் ஊக்குவிக்கப்படுமிடத்து தரமான வீரர்களை உருவாக்கும்.

## சோலையான் விளையாட்டுக் கழகம்

வேதர் அடைப்பு, வடகாடு, அல்லின் வீதி போன்ற குறிச்சிகளில் வசித்த விளையாட்டில் ஆர்வமுள்ள இளைஞர்களை ஊக்குவித்து

விளையாட்டுத் துறையில் ஈடுபடுத்தும் நோக்குடன் 1981ஆம் ஆண்டு ஜனவரி 14ஆம் நாள் திரு. K.C. கந்தசாமி (இ.போ.ச காரைநகர் சாலை முகாமையாளர்) எடுத்துக் கொண்ட பெருமுயற்சியால் உருவாக்கப்பட்டது. கழகத்தை உருவாக்குவதிலும், வளர்ச்சியிலும், பயிற்சி வழங்குவதிலும் விளையாட்டு வீரர் அமரர் ஆ. இரத்தினகோபால் பேராசிரியர் வே. இராமகிருஸ்ணன், அமரர் திரு. ஆ. கனகசபை, திரு. த. துரைசாமி (ஆசிரியர்) ஆகியோர் பங்குபற்றினர். சோலையான் விளையாட்டுக் கழகம் இயங்கிய பிரதேச மக்கள் உணர்வுபூர்வமாக வழங்கிய ஒத்துழைப்பு கழகம் மிகக் குறுகிய காலத்தில் மிகப் பெரிய வெற்றிகளை அடையக் காரணமாயிற்று. 1981ம் ஆண்டு மார்ச் மாதம் உதவி அரசாங்க அதிபர் பிரிவில் நடைபெற்ற மெய்வல்லுனர் போட்டியில் கழகம் 1ஆம் இடத்தை ஆண்கள் பெண்கள் பிரிவில் பெற்று வெற்றிக் கேடயத்தை பெற்றுக் கொண்டது. தொடர்ந்து மூன்று ஆண்டுகள் 1ஆம் இடத்தை தனதாக்கி கொண்டது. 1989ஆம் ஆண்டு சித்திரை 15ஆம் நாள் ஆண்டு விழாவை கழக மைதானத்தில் வெகு விமரிசையாக கொண்டாடியது. இவ்விழாவில் காரைநகரில் செயற்பட்ட அனைத்து விளையாட்டுக் கழகங்களும் பங்குபற்றின. கழகத்தின் ஆரம்பக் காலத்தில் திரு. S. செல்வச்சந்திரன், திரு. S. தேவராஜா, திரு. S. நடராஜா, திரு. வே. நல்லானந்தராசா, பொ. சிறிஸ்கந்தராஜா ஆகியோர் கழகத்தின் ஆரம்பகால வெற்றிகளுக்காக உழைத்தவர்கள். திரு.செல்லையா ஞானேஸ்வரன் (ஞானி - வேதர் அடைப்பு) யாழ் மாவட்ட உதவி அரசாங்க அதிபர் பிரிவுகளுக்கிடையில் நடைபெற்ற மெய்வல்லுநர் போட்டியில் 1ம் இடத்தைப் பெற்று சாதனை ஏற்படுத்தியதுடன் தேசிய மட்ட போட்டியில் 2ம் இடத்தைப் பெற்றார்.

மீள் குடியேற்றத்தின் பின் திரு. K.C. கந்தசாமியின் முயற்சியின் பெறுபேறாக 1997, 1998, 1999ம் ஆண்டு காலப் பகுதிகளில் கழகம் வெற்றிகளை பெற்றுக் கொண்டது. இக்காலகட்டத்தில் கலாநிதி ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய விளையாட்டுத்துறை ஆசிரியர் திரு. அ. ஜெகதீஸ்வரனின் பயிற்சியும் வழிகாட்டலும் பாராட்டுக்குரியது எனக் குறிப்பிடுகிறார் திரு. K.C. கந்தசாமி.

**கோவளம் விளையாட்டுக் கழகம்**

விளையாட்டுத் துறையில் ஆற்றலும், ஆர்வமும் கொண்ட இளைஞர்கள் தம் ஆற்றலை வெளிப்படுத்த கோவளம் இளைஞர் மன்றம் என்ற ஓர் அமைப்பு ரீதியாக 1981இல் இருந்து செயற்பட ஆரம்பித்தனர். கிராம அபிவிருத்தி சங்கத்தின் ஒரு பகுதியில் வாசிகசாலை நூல்நிலையம் என்பவற்றை ஆரம்பித்ததோடு மெலிஞ்சியோடை மைதானத்தை தமது விளையாட்டு நிகழ்வுகளுக்கு பயன்படுத்தினர். 1981ல் ஒரு விளையாட்டு போட்டியை நடாத்தியது. 1982இலிருந்து பச்சை, சிவப்பு இல்லங்களை அமைத்து 20 - 40, 40 - 50, 50இற்கு மேல் எனப் பிரித்து விளையாட்டு போட்டிகளை நடத்தினர். 1990 வரை இப்போட்டிகள் கோவளத்திற்கு அண்மையிலுள்ள குறிச்சி மக்களின் போராதரவுடன் நடைபெற்றன. விளையாட்டு போட்டிக்கு ஊர் மக்கள் வயது வேறுபாடின்றி திரண்டிருப்பர்.

ஊர்காவற்துறை உதவி அரசாங்க அதிபர் பிரிவில் நடைபெறும் போட்டிகளில் கழக வீரர்கள் பங்குபற்றி சாதனை நிகழ்த்தினர். 1982, 1983ம் ஆண்டுகளில் யாழ்ப்பாண மாவட்டத்தில் நடாத்தப் பெற்ற மென்பந்து துடுப்பாட்ட போட்டியில் வெற்றிக் கிண்ணத்தை பெற்று பத்திரிகைகளினதும், விளையாட்டுத்துறை அபிமானிகளினதும் பாராட்டையும் பெற்றது. வாரிவளவு நல்லியக்க சபையினால் நடாத்தப்பட்ட மென்பந்து துடுப்பாட்ட வெற்றிக் கேடயத்தை பலமுறை பெற்றுக் கொண்ட கோவளம் இளைஞர் மன்றம் வன்பந்து துடுப்பாட்டத்திலும் ஈடுபட்டு வந்தது. மாவட்ட ரீதியில் உதவி அரசாங்க அதிபர் பிரிவு ரீதியில் நடைபெறும் உதைபந்தாட்டம், துடுப்பாட்டம் போன்ற போட்டிகளில் கழகம் பங்குபற்றி வெற்றிக் கேடயங்களை பெற்றுக் கொண்டது. காரை விளையாட்டுக் கழகத்துடன் நடைபெறும் போட்டிகள் மிகவும் விறுவிறுப்பானதும் உணர்வு பூர்வமானதுமாகும். காரைநகரில் அமைந்துள்ள கடற்படை அணியுடனும் 1981, 1982 ம் ஆண்டு காலப்பகுதியில் காற்பந்தாட்டப் போட்டியில் பங்குபற்றியது.

கோவளம் இளைஞர் கழகத்தின் வெற்றியில் யாழ்ப்பாண இந்துக் கல்லூரியில் தனது பள்ளிப் பருவத்தில் விளையாட்டுத்துறையில் பிரகாசித்து, பின்னர், அக்கல்லூரியின் உடற்கல்வி ஆசிரியராக சேவையாற்றிய திரு. த. சிவகுமாரின் வழிகாட்டலும் அனுபவமும் கோவளம் இளைஞர் மன்றம் ஆற்றல் மிக்கதாக வளர்ச்சியுற காரணமாக அமைந்தது.

திரு. செல்வரத்தினம் நீதிபதி மார்க் ஓடுகள் உரிமையாளர், திரு. வே. பரஞ்சோதி, திரு. சு. தவராசன், திரு. சு. உருத்திரசிங்கம் போன்ற கோவளம் வர்த்தகப் பெருமக்களின் அனுசரணையும் உற்சாகமும் குறிப்பிடத்தக்கது.

திரு. அ. தியாகராஜா திரு. S. சேனாதிராஜா, திரு. P. பொன்னுசாமி ஆகியேர்களின் வழிகாட்டல் மேலும் உதவியாக அமைந்தது. பல விளையாட்டு நிகழ்வுகளிலும் ஈடுபடும் திறமை கொண்ட அணியினர் கழகத்தின் வெற்றிகளுக்கு காரணமாயினர். திரு. த. சிவகுமாரன், திரு. த. சிவபாலன், திரு. த.சிவகணேசன், திரு. த.சிவசோதி, செ.ஞானசோதி, அ.சர்வேஸ்வரன்(பாபு), அ.ஞானேஸ்வரன்(ரமணன்), சி. நந்தகுமாரன், சி. இந்திரன், சி. ரவீந்தின், த. கண்ணன், இ. இரவீந்திரன், இ. சுரேந்திரன் ஆகியோர் ஆவர்.

**களபூமி சனசமூக நிலையம்**

1970இன் இறுதிப் பகுதியில் 33ஆவது ஆண்டு விழாவை கொண்டாடியது. வீதி ஓட்டப் போட்டிகள், சைக்கிள் ஓட்டப் போட்டிகள், காரைநகர் கழகங்களுக்கிடையிலான உதைபந்தாட்டப் போட்டிகள் என இரண்டு வாரங்களாகக் கொண்டாட்டம் நீடித்தது. வெற்றி பெற்ற வீரர்களுக்கு வெற்றிக் கேடயங்கள் வழங்கி கௌரவிக்கப்பட்டனர். ஊர்காவற்றுறை மக்கள் வங்கி முகாமையாளர் திரு. கதிர்வேலாயுதபிள்ளை பிரதம விருந்தினராகக் கலந்து கொண்டார். விழாவின் இறுதியில் கலை நிகழ்வுகளும் இடம் பெற்றன.

**வாரிவளவு நல்லியக்க சபை**

பாலர் கல்வி முதல் பல்கலைக்கழகம் வரை உடற்கல்வி என்பதை காரைநகரில் நடைமுறைப்படுத்தியவர் வாரிவளவு நல்லியக்க சபை செயலாளர் திரு. சி. பத்மநாதன் (பட்டுமாமா) பாலர் பாடசாலைகளுக்கிடையிலான விளையாட்டுப் போட்டிகள் கல்லூரி மாணவர்கள், பல்கலைக்கழக மாணவர்கள் பங்கேற்க 14 வகையான விளையாட்டு நிகழ்வுகள், காரைநகர் கடற்படையின் ஆதரவுடன் நீச்சல் போட்டி என்பனவற்றை சித்திரை மாதங்களில் நடாத்தி சித்திரை வருடப் பிறப்பை குதூகலமாக கொண்டாட காரைநகர் மக்கள் அனைவரையும் வாரிவளவிற்கு வரைவழைப்பார்.

அன்னாரின் கல்வி செயற்பாட்டினால் காரைநகர் பண்டத்தரிப்பு கல்விக் கோட்டத்துடன் இணைந்திருந்த காலத்தில் கோட்டத்தில் 25 மாணவர்கள் ஆண்டு 5 புலமைப்பரிசில் பரீட்சையில் சித்தியெய்திய போது 12 மாணவர்கள் காரைநகரில் சித்தி எய்துவது வழமை. வாரிவளவு நல்லியக்க சபையின் வெற்றிடம் இப்பொழுது உணரப்படும் என நம்புகின்றேன். வாரிவளவு நல்லியக்க சபையை அமரர் பத்மநாதன் நிருவாக முறையில் மீண்டும் ஆரம்பிப்பது காலத்தின் தேவை.

தற்போது காரைநகரில் செயற்படும் விளையாட்டுக் கழகங்கள்

1996ம் ஆண்டு மீளக்குடியமர்ந்த பின்பு ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர் பிரிவின் கீழ் பதிவு செய்யப்பட்ட கழகங்களுக்கிடையான தடகளப் போட்டியில் சோலையான் விளையாட்டுக் கழகம் காரைநகர் பிரதேச விளையாட்டு வீரர்களை உள்ளடக்கி அந்நிகழ்ச்சிகளில் பங்குபற்றி பிரதேச வெற்றிக் கேடயத்தை தனதாக்கி வெற்றியீட்டியது. 1997, 1998, 1999ஆம் காலப்பகுதியில் பின்வரும் கழகங்கள் விளையாட்டு நிகழ்வுகளில் பங்குபற்றின.

| | | |
|---|---|---|
| சிவகெளரி | :- | பெரியமணல் J/40 |
| இளம்சோலை | :- | கல்லின் வீதி J/46 |
| இளம் சுடர் | :- | |
| ஒளிச்சுடர் | :- | காரை மத்தி J/48 |
| கோவளம் விளையாட்டுகழகம் | :- | J/41 |
| இளம் தென்றல் விளையாட்டுக் கழகம் | :- | |
| தோப்புக்காடு விளையாட்டுக் கழகம் | :- | J/44 |
| அம்பாள் விளையாட்டுக் கழகம் | :- | ஊரி J/42 |
| துள்ளுமீன் விளையாட்டுக் கழகம் | :- | மருதபுரம் J/45 |
| கலாநிதி விளையாட்டுக் கழகம் | :- | வலந்தலை J/47 |
| நல்ல நண்பர்கள் விளையாட்டுக் கழகம் | :- | மருதடி |

2003ஆம் ஆண்டு காரைநகர் தனியான உதவி அரசாங்க பிரிவாக பிரிக்கப்பட்டதன் பின்னர் இக்கழகங்கள் இப்பிரிவின் கீழ் பதிவு செய்து செயற்பட்டன. பின்பு நடைபெற்ற விளையாட்டு நிகழ்வுகளில் இவைகளின் எண்ணிக்கை படிப்படியாக குறைய ஆரம்பித்துவிட்டன. 2004, 2005, 2006, 2007, 2008, 2009, 2010 ஆகிய ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க விளையாட்டுக் கழகங்களாகப் பின்வருவன செயல்படுகின்றன.

1. ஒளிச்சுடர் விளையாட்டுக் கழகம்
2. கோவளம் விளையாட்டுக் கழகம்
3. இளம் தென்றல் விளையாட்டுக் கழகம்
4. தோப்புக்காடு விளையாட்டுக் கழகம்
5. அம்பாள் விளையாட்டுக் கழகம்
6. கலாநிதி விளையாட்டுக் கழகம்
7. நல்ல நண்பர்கள் விளையாட்டுக் கழகம்

2011 ஆண்டிற்கான பிரதேச மட்ட தடகளப் போட்டியில் இக்கழகங்கள் பங்குபற்றின. இதில் கலாநிதி விளையாட்டுக்கழகம் வெற்றிக் கேடயத்தை சுவீகரித்துக் கொண்டது. 2011ஆம் ஆண்டு சித்திரை வருடப்பிறப்பு தினத்தன்று விளையாட்டுக் கழகத்தினர் கலாநிதி ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய மைதானத்தில் புத்தாண்டை பொங்கல் பொங்கி கொண்டாடினர்.

**பாடசாலை விளையாட்டு நிகழ்வுகள்**

காரைநகர் பாடசாலைகளில் அன்றும் இன்றும் விளையாட்டுப் போட்டிகள் முதலாம் தவணையில் நடைபெறும். கலாநிதி.ஆ.தியாகராஜா மத்திய மகா வித்தியாலயம், யாழ்ரன் கல்லூரி, சுந்தரமூர்த்திநாயனார் வித்தியாலய, மாணவர்கள் கல்வித் திணைக்களத்தால் நடாத்தப்பெறும் பெரு விளையாட்டுக்களில் பங்குபற்றுவார்கள். கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய மாணவர்கள் மாவட்ட, மாகாண, தேசிய ரீதியில் பங்குபற்றி பரிசில்கள் பெற்றுள்ளார்கள்.

கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலயத்தின் முதலாவது மெய்வல்லுனர் போட்டி வலந்தலை கண்ணகி அம்மன் கோயிலுக்கு கிழக்கே உள்ள வெளியில் நடைபெற்றது. தினந்தோறும் மாணவர்களை ஆசிரியர்கள் விளையாட்டில் ஈடுபட இப்பகுதிக்கு அழைத்துச் செல்வது வழமை. 1953ஆம் ஆண்டு காலப்பகுதியில் கிழக்கு வீதியில் அமைந்துள்ள குழுவி மதவுக்கு பின்புறமாகவுள்ள தச்சன் பனையடி என்னும் இடத்தில் மாணவர்கள் விளையாட்டில் ஈடுபட்டனர். அமரர் ந. நடராஜா ஞாபகார்த்த மண்டபம் மகப்பேற்று மருத்துவமனை ஆகியவற்றை நிர்மாணித்து எஞ்சிய காணியை அவரின் துணைவியார் அமரர் தங்கம்மா நடராஜா அவர்களால் தற்போதைய விளையாட்டு மைதானம் அன்பளிக்கப்பட்டது. இம்மைதானத்தை சீரமைப்பதில் அமரர் J.C. அருளம்பலம் பெரும் பங்காற்றினார்.

1964ஆம் ஆண்டு கட்டப்பட்ட பார்வையாளர் அரங்கும், 1970களில் அமைக்கப்பட்ட சுற்று மதில்களும் சேதமடைந்துள்ளது. இம்மைதான விளையாட்டு இடப்பரப்பு விஸ்தரிக்கப்பட்டு, பார்வையாளர் அரங்கு நவீன வசதிகளுடன் அமைக்கப்பட்டு, அத்திவாரமிடப்பட்டு கம்பி வலை சுற்று வேலி (Wire mesh) அமைக்கப்பட்டு மழை காலங்களிலும் மைதானம் பாவிக்கக்கூடியதாக தயார் செய்யப்படல் வேண்டும். காரைநகர் மத்தியில் அமைந்துள்ள இம்மைதானம் மாவட்ட மைதான தரத்துக்கு தரம் உயர்த்துவதற்கு மேற்கூறிய பணிகளை நிறைவு செய்ய 10 மில்லியன் ரூபாய்கள் தேவைப்படும்.

யாழ்ரன் கல்லூரி விளையாட்டு மைதானம் கனடா-காரை கலாச்சார மன்றத்தின் உதவியுடன் சுற்று வேலிகள் அமைக்கப்பட்டு போதுமான விளையாட்டு இடப்பரப்பு உள்ளதாக அமைந்துள்ளது. விளையாட்டு நிகழ்வுகளுக்கு உபயோகிக்கப்படும் இடத்தின் நிலத்தன்மையை அபிவிருத்தி செய்தல், புல் நடுதல் ஆகியன விளையாட்டு நிகழ்வுகளுக்கு ஊக்குவிப்பாக அமையும். எஞ்சியுள்ள நிலப்பரப்பில் பயன்தரு மரங்களை நாட்டிப் பேணல் கல்லூரியின் கவினுறு நிலையை மேம்படுத்தும்.

சுந்தரமூர்த்திநாயனார் வித்தியாலயத்தின் ஆரம்பகால பிரதான மண்டபம் 10 ஆண்டுகளுக்கு மேலாக பழுதடைந்து பயன்படுத்தப்படாமல் இருக்கிறது. அம்மண்டபம் அகற்றப்பட்டு ஆலடியில் இயங்கும் ஆரம்ப பிரிவுக்கு தேவைப்படும் கட்டடத் தொகுதியை அமைக்க பயன்படுத்தலாம். இம்மண்டபம் அமைந்துள்ள இடப்பரப்பை ஏற்கனவே திட்டமிட்டவாறு விளையாட்டு மைதானமாக அபிவிருத்தி செய்தல் வேண்டும்.

வியாவில் சைவ வித்தியாலய விளையாட்டு மைதானத்தில் புல் நடுதல் விளையாட்டு நிகழ்வுகளுக்கு ஊக்குவிப்பாக அமையும். மைதானத்தை சுற்றி அத்திவாரம் அமைத்து அவற்றிற்கு கம்பி வலை சுற்றுவேலி (wire mesh) அமைத்தல் வேண்டும்.

விளையாட்டு மைதானங்களை அபிவிருத்தி செய்தல் விளையாட்டுத்துறை மேம்பாட்டிற்கு அவசியமானதொன்றாகும்.

**கலாநிதி ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய மாணவர்கள் யாழ் மாவட்டம், வடக்கு, கிழக்கு மாகாண போட்டிகளில் தெரிவு செய்யப்பட்டு தேசிய மட்டப் போட்டியில் பங்குபற்றிய விபரங்கள்**

1934ஆம் ஆண்டு நடைபெற்ற (ALL CEYLON ATHLETIC MEET) அகில இலங்கை பாடசாலைகளுக்கு இடையிலான போட்டிகளில் பங்கு பற்றி திரு. அ. சுந்தரம்பிள்ளை, திரு. க. சுப்பிரமணியம் ஆகியோர் பரிசில்களைப் பெற்றுள்ளனர் என 1934ஆம் ஆண்டில் கரவெட்டியில் வெளியிடப்பட்ட "ஞானசித்தி" எனும் பத்திரிகையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

1934ஆம் ஆண்டு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் வித்தியாசாலையில் ஜே.எஸ் பரீட்சையில் 13 பேர் இரண்டாம் பிரிவிலும் வடமாகாணத்தில் ஒருவர் 1ஆம் பிரிவிலும் சித்தி எய்தியமைக்கான பாராட்டு விழா சிவத்திரு. அ. சீதாராம ஐயர் தலைமையாசிரியர்

தல்லைமையில் நடைபெற்றுக் கொண்டிருந்த போது இவ்விருவரினதும் வெற்றிச் செய்தி கிடைக்கப்பெற்று அறிவிக்கப்பட்ட பொழுது மாணவர் எல்லைமீறி குதூகலித்தமையை அன்றைய விழாவில் சமூகமாயிருந்த மாணவர் மூலமாக அறியக்கூடியதாகவிருந்தது.

1) திரு. அ. சுந்தரம்பிள்ளை கோல் ஊன்றிப் பாய்தல், குறுந்தூர ஓட்ட வீரர் உதைபந்தாட்டத்தில் இடது கரை வீரர் (Right extreme)

2) சடைபாளி பரிபாரி நாராபணியின் சகோதரர் கணபதிப்பிள்ளை பொன்னாலையில் வசித்தவர். தனது மகன் சுப்பிரமணியத்தை காரை இந்துக் கல்லூரியில் கற்பதற்காக அனுப்பி வைத்தார். திரு. சுப்பிரமணியம் குறுந்தூர ஓட்ட வீரர்.

3) 1960ஆம் ஆண்டின் முற்பகுதியில் காரைநகர் இந்துக் கல்லூரியில் கல்வி பயின்ற மாப்பாணவூரியை சேர்ந்த திரு. வேலுப்பிள்ளை சிவம் அகில இலங்கை பாடசாலைகளுக்கிடையிலான மெய்வல்லுனர் போட்டிகளில் பங்குபற்றினார்.

4) செல்வன். செல்வரத்தினம் இராதாகோபாலன் 1973, 1974ஆம் ஆண்டுகளில் 13 வ. கீ 15 வ. கீ ஆண் பிரிவுகளில் யாழ் மாவட்ட பாடசாலைகள் மெய்வல்லுனர் போட்டியில் 100m, நீளம் பாய்தல், உயரம் பாய்தல் நிகழ்ச்சிகளில் 1ஆம் இடங்களைப் பெற்று இலங்கைப் பாடசாலைகள் சங்க 1973ஆம் ஆண்டு மெய்வல்லுனர் போட்டியில் 100m, உயரம் பாய்தல் ஆகிய நிகழ்ச்சிகளில் 1ஆம் இடத்தைப் பெற்று தங்கப் பதக்கம் வென்றார். நீளம் பாய்தல் நிகழ்வில் 2ஆம் இடத்தைப் பெற்று வெள்ளிப் பதக்கம் வென்றார். 1974 இல் 100m, 1ஆம் இடம் தங்கப்பதக்கம் நீளம் பாய்தல் 2ஆம் இடம் வெள்ளிப் பதக்கம் வென்றார்.

5) செல்வன். கந்தமூர்த்தி ஆனந்தசற்குணநாதன் 1978, 1977, 1980, 1981, 1982ம் ஆண்டுகளில் 15 வ. கீ ஆண், 17 வ. கீ. ஆண், 19 வ. கீ. ஆண் ஆகிய பிரிவுகளில் 200m, 400m, உயரம் பாய்தல், ஈட்டி எறிதல், 400m தடைதாண்டல், தட்டு எறிதல், முப்பாய்ச்சல் ஆகிய நிகழ்ச்சிகளில் யாழ் மாவட்ட பாடசாலைகள் மெய்வல்லுனர் போட்டியில் 1ஆம் இடங்களைப் பெற்று இலங்கைப் பாடசாலைகள் சங்க மெய்வல்லுனர் போட்டியில் பங்குபற்றியவர். 1980ஆம் ஆண்டு இலங்கைப் பாடசாலைகள் சங்க மெய்வல்லுனர் போட்டியில் 400m தடை தாண்டலில் 4ஆம் இடத்தைப் பெற்றவர்.

6) செல்வன். சபாரத்தினம் கோவிந்தராசா
1977, 1978, 1979, 1980, 1981ஆம் ஆண்டுகளில் 13 வ.கீ. ஆண், 15 வ.கீ ஆண், 17 வ.கீ. ஆண், 19 வ.கீ. ஆண் ஆகிய பிரிவுகளில் 100m, 200m, நீளம் பாய்தல் நிகழ்ச்சிகளில் யாழ் மாவட்ட மெய்வல்லுனர் போட்டியில் 1ஆம் இடத்தைப் பெற்று இலங்கைப் பாடசாலைகள் சங்க மெய்வல்லுனர் போட்டிக்கு தகுதி பெற்று பங்குபற்றியவர். 100m, 200m, நிகழ்ச்சிகளில் தெரிவுப் போட்டியில் தெரிவு செய்யப்பட்டு இறுதிப் போட்டிகள் வரை முன்னேறியவர்.

7) செல்வன். திருநாவுக்கரசு யோகராசா
1980, 1981, 1982ம் ஆண்டுகளில் 17 வ.கீ. ஆண், 19 வ.கீ. ஆண் ஆகிய பிரிவுகளில் 1500m, 3000m நிகழ்ச்சிகளில் யாழ் மாவட்டப் பாடசாலைகள் மெய்வல்லுனர் போட்டியில் 1ஆம் இடத்தைப் பெற்று இலங்கை பாடசாலைகள் சங்க மெய்வல்லுனர் போட்டியில் பங்குபற்றியவர்.

8) 4x100, 4x400 அஞ்சல் அணிகள் யாழ் மாவட்ட பாடசாலைகளுக்கிடையில் கல்வித் திணைக்களம் நடாத்திய போட்டியில் தேசிய ரீதியிலான போட்டிக்குத் தெரிவு செய்யப்பட்டும் போட்டியில் பங்குபற்றவில்லை அணி வீரர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| ந. யோகநாதன் | 1. | ந. சுந்தரேஸ்வரன் |
| வே. பரராஜசிங்கம் | 2. | பொ. இராசரத்தினம் |
| ந. உருத்திரசிவம் | 3. | மு. அழகேந்திரன் |
| ந. ஜீவராஜ் | 4. | க. சிவலிங்கம் |

த மெய்வல்லுனர் போட்டியில் பல நிகழ்ச்சிகளில் வெற்றிகளைப் பெற்று காரை இந்துக் கல்லூரி 1ஆம் இடத்தைப் பெற்றது. போட்டியின் பிரதம அதிதி திரு. S. தங்கராசா, பிரதம கல்வி அதிகாரி உரையாற்றும் போது கிராமப் பாடசாலை ஒன்று யாழ் வட்டத்தில் உள்ள பிரபல பாடசாலைகளுடன் போட்டியிட்டு 1ஆம் இடத்தைப் பெற்றமை அப்பாடசாலைச் சமூகம் விளையாட்டில் டுத்துக் கொண்ட முயற்சியும் அர்ப்பணிப்பும் பாராட்டப்பட வேண்டியது என்று குறிப்பிட்டார்.

மேற்கூறப்பட்ட இலக்கங்கள் 04. - 07 வரையான நிகழ்வுகள் திரு. அ. சோமஸ்கந்தன் விளையாட்டுத்துறை பொறுப்பாசிரியராக கடமை ஆற்றிய காலத்தில் பயிற்றுவிக்கப்பட்டு யாழ் மாவட்ட ரீதியில் தெரிவு செய்யப்பட்டு தேசிய போட்டிகளில் பங்குபற்றியவர்கள் (08 உட்பட)

திரு. அ. சோமஸ்கந்தன் வடமராட்சியைப் பிறப்பிடமாகக் கொண்டவர். யாழ்ப்பாணத்தில் வசித்தவர். 1965ஆம் ஆண்டில் இருந்து 1983 வரை கல்லூரியின் விஞ்ஞான ஆசிரியராக கடமை ஆற்றியதுடன் விளையாட்டுத்துறை பொறுப்பாசிரியராக கடமை ஆற்றிய காலத்தில் மேற்கூறப்பட்ட மாணவர்கள் பயிற்றுவிக்கப்பட்டு மாவட்ட, தேசிய மட்ட விருதுகளை பெற்று கல்லூரிக்கு பெருமை சேர்த்தவர். விஞ்ஞானம் கற்பித்தலில் நுட்பங்களை கையாண்டு கற்பித்தமையால் மாணவர் மனங்களை வென்றவர். காரைநகர் விளையாட்டுத்துறைக்கு திரு. சோமஸ்கந்தனின் பங்களிப்பு காத்திரமானவை .

9) செல்வன் சொர்ணலிங்கம் புஸ்பலிங்கம் 2001ஆம் ஆண்டு 15 வ.கீ ஆண்கள் பிரிவில் உயரம் பாய்தல் நிகழ்ச்சியில் வடகிழக்கு மாகாண மட்டத்தில் 3ஆம் இடத்தைப் பெற்று தேசிய மட்டப் போட்டியில் பங்குபற்றினார். தேசியமட்டத்தில் 10ஆம் இடத்தைப் பெற்றார்.

2002, 2003ஆம் ஆண்டுகளில் 17 வ.கீ. ஆண் பிரிவில் வடகிழக்கு மாகாண மட்டப் போட்டியில் 1ஆம் இடத்தைப் பெற்றதுடன் 1.72m உயரத்தைத் தாண்டி புதிய சாதனையையும் ஏற்படுத்தி தங்கப் பதக்கம் பெற்றவர். தேசிய மட்டத்தில் 2002ஆம் ஆண்டு 8ஆம் இடத்தைப் பெற்றார். அமெரிக்கரான Fosbury என்பவர் Fosbury Flop என்று அழைக்கப்படும் நுட்பத்தை அறிமுகப்படுத்தி 1968ல் ஒலிம்பிக் போட்டியில் தங்கப்பதக்கத்தை வென்ற நுட்பத்தை செல்வன் சொ.புஸ்பலிங்கம் காரைநகரில் முதன்முறையாக கையாண்டார். இம்மாணவன் வைக்கோலை சாக்கிற்குள் நிறைத்து அவற்றை மெத்தையாகப் பாவித்து (பாய்தலுக்கான மெத்தை இன்மையால்) பாய்வதும் பேட்டியும் காரை ஆதித்தியன் 2005 சுடர் 01 இல் பிரசுரமாகியிருந்தது.

10) செல்வி காந்திதிலகர் உதயா 2001ம் ஆண்டு 17வ.கீ.பெண்கள் பிரிவில் 1500m நிகழ்ச்சியில் 3ம் இடத்தை வடகிழக்கு மாகாணப் போட்டியில் பெற்று தேசிய மட்டப் போட்டியில் பங்குபற்றினார்.

11) செல்வி பரமானந்தசிவம் கலைமகள் 2001ம் ஆண்டு 19வ.கீ. பெண்கள் பிரிவில் 1500m, 3000m நிகழ்ச்சியில் வடகிழக்கு மாகாண மட்டத்தில் 3ஆம் இடத்தைப் பெற்று தேசிய மட்டப் போட்டியில் கலந்து கொண்டார்.

12) செல்வன் சந்திரசேகரம் சந்திரகுமார்
2003ம் ஆண்டு 14 வ.கீ. ஆண்கள் பிரிவில் யாழ் மாவட்ட Junior Atheltic Meet இல் 1ஆம் இடத்தைப் பெற்று தேசிய மட்ட Junior Atheltic meet இல் பங்குபற்றினார்.

13) தேசியமட்டப் போட்டியில் தகுதி பெற்றிருந்தும் தேசிய மட்டப் போட்டியில் பங்குபற்றாத மாணவர் விபரம்

- செல்வி வேலாயுதம் சிவதாரணி 2002ம் ஆண்டு 19 வ.கீ. பெண்கள் பிரிவில் 400m தடைதாண்டல் நிகழ்ச்சியில் வடகிழக்கு மாகாண

மட்டத்தில் 3ம் இடத்தைப் பெற்று தேசிய மட்டப் போட்டிக்கு தெரிவு செய்யப்பட்டார்.

- செல்வன் பேரின்பராசா சசிக்குமார் 2001ம் ஆண்டு 13 வ.கீ.ஆண்.கள் பிரிவில் வடகிழக்கு மாகாண மட்டப் போட்டியில் 200m நிகழ்ச்சியில் 3ம் இடத்தைப் பெற்று தேசிய மட்டப் போட்டிக்கு தெரிவுசெய்யப்பட்டார்.
- செல்வி சோ.திவ்வியா 2004ம் ஆண்டு Jaffna District Junior Athletic meet ,ல் 16 வ.கீ.பெண்கள் பிரிவில் நீளம் பாய்தலில் 1ம் இடத்தைப் பெற்று தங்கப்பதக்கம் வென்று தேசிய மட்ட Junior Athletic meet இற்கு தெரிவுசெய்யப்பட்டார்.

இலக்கம் 9 - 13 வரையிலான நிகழ்வுகள் திரு.அ.ஜெகதீஸ்வரன் விளையாட்டுத்துறை பொறுப்பாசிரியராக கடமை ஆற்றிய காலத்தில் பயிற்றுவிக்கப்பட்டு வடகிழக்கு மாகாண ரீதியில் தெரிவு செய்யப்பட்டு தேசிய போட்டியில் பங்கு பற்றிய மாணவர்கள். (14 உட்பட) திரு. அ. ஜெகதீஸ்வரன் விஞ்ஞான பாட ஆசிரியராக 1996 - 2010 வரை கடமை ஆற்றியவர். செல்வன்.சொ.புஸ்பலிங்கம் காரை ஆதித்தனுக்கு வழங்கிய பேட்டியில் தனது திறமையை இனங்கண்டு பயிற்றுவித்து, மேலதிக பயிற்சிக்கு யாழ் மாவட்ட விளையாட்டு உத்தியோகத்தர் பயிற்றுவிப்பாளர் திரு. செ. ரமணனிடம் தனது மோட்டார் சைக்கிளில் யாழ் மத்திய கல்லூரி மைதானத்திற்கு அழைத்துச் சென்று பயிற்சி வழங்கி சாதனை படைக்க வழி செய்தவர் திரு. அ. ஜெகதீஸ்வரன் என நன்றியும் பாராட்டும் தெரிவித்துள்ளார். திரு. அ. ஜெகதீஸ்வரன் வீரர்களுக்கு வழங்கிய பயிற்சியும் வழிகாட்டலும் 1997ஆம் ஆண்டு காலப்பகுதியில் சோலையான் விளையாட்டுக் கழகம் வெற்றி பெற துணைநின்றதாக சோலையான் விளையாட்டுக் கழக தலைவர் திரு. K.C. கந்தசாமி குறிப்பிட்டுள்ளார். திரு. அ. ஜெகதீஸ்வரன் வாய்ப்புகளும் வசதிகளும் அரிதான போக்குவரத்து கஸ்டங்களுக்கு மத்தியில், மிக நெருக்கடியான கால கட்டத்தில் ஆற்றிய பணி என்றும் பாராட்டுக்குரியது.

**உதைபந்தாட்டம்**

செல்வன். கந்தமூர்த்தி ஆனந்தசற்குணநாதன் (சக்கலாவோடை) யாழ்ப்பாண மாவட்ட பாடசாலைகள் கழகத்தின் ஆதரவுடன் 1981இல் யாழ் மாவட்ட பாடசாலைகளுக்கு இடையிலான உதைபந்தாட்டப் போட்டிகளில் யாழ் மாவட்டத்தில் முன்னணி வீரராக தெரிவு செய்யப்பட்டு இலங்கை பாடசாலை உதைபந்தாட்ட அணி தெரிவிற்கான தெரிவு போட்டிகளில் பங்குபற்றியவர்.

1930 - 44களில் கீழ் குறிப்பிடப்படும் வீரர்கள் யாழ்ப்பாண பாடசாலைகளின் உதைபந்தாட்ட அணிகளில் இடம் பெற்றதோடு மாத்திரமல்லாமல் யாழ் மாவட்டத்தில் குறிப்பிட்டுச் சொல்லும் வீரர்களாக திகழ்ந்தார்கள்.

★ திரு. அ. சுந்தரம்பிள்ளை (சிவன் கோவிலடி) யாழ்ப்பாண கல்லூரியின் உதைபந்தாட்ட வீரர்.

★ அமரர் திரு. தர்மரத்தினம் (புதுறோட்டு) யாழ்ப்பாணக் கல்லூரி உதைபந்தாட்ட வீரர். துடுப்பாட்ட அணித்தலைவர் துடுப்பாட்டத்தில் சாதனை ஏற்படுத்தியவர். கெப்டன். தர்மரத்தினம் ஆங்கிலேயர் நாட்டு இராணுவத்தில் R.A.S.C Royal Artillery Service ,ல் சேர்ந்து ஜேர்மன் நாட்டு படைகளுக்கு எதிரான யுத்தத்தில் பின்நாளில் பங்குபற்றியவர்.

★ அமரர் வே.சிவசுப்பிரமணியம் (நடுத்தெரு) யாழ்ப்பாணக் கல்லூரி அணித் தலைவர்.

★ அமரர் கனகரத்தினம் (புது றோட்டு) பரமேஸ்வரா கல்லூரி அணித் தலைவர்

★ அமரர் J.C.அருளம்பலம் (தபாற் கந்தோரடி) யாழ்ப்பாண கல்லூரி உதைபந்தாட்ட வீரர் காரை இந்துக் கல்லூரியின் உடற்கல்வி ஆசிரியர் சேவையில் இருக்கும் போது அமரரான அருளம்பலத்தின் பூதவுடல் தாங்கிய குதிரை வண்டியை கல்லூரி உதைபந்தாட்ட அணிவீரர்களும், மாணவர்களும் மயானம் வரை இழுத்துச் சென்று மரியாதை செலுத்தினர்.

★ திரு. ஆ. இரத்தினகோபால் (புது றோட்டு) 1945, 1946ஆம் ஆண்டுகளில் யாழ் மத்திய கல்லூரி, யாழ் இந்துக் கல்லூரி உதைபந்தாட்ட அணிகளின் தலைவர். 1945ஆம் ஆண்டு யாழ் மாவட்டக் கல்லூரிகளில் திறமையான கால்பந்தாட்ட வீரராக தெரிவு செய்யப்பட்டவர்.

★ திரு.A.செல்வரத்தினம் (WALKERS, மாப்பானவூரி) 1951ம் ஆண்டு காரைநகர் இந்துக்கல்லூரி உதைபந்தாட்ட அணித்தலைவர். துடுப்பாட்ட வீரர். காரை இந்துக்கல்லூரி உதைபந்தாட்ட அணியின் பயிற்றுவிப்பாளர்.

★ திரு நல்லையா பொன்னையா (மாப்பாணவூரி) சுண்ணாகம் ஸ்கந்தவரோதயா கல்லூரி உதைபந்தாட்ட அணித் தலைவர்.

★ திரு.சண்முகம் சிவசோதி (களபூமி) யாழ் மத்திய கல்லூரியின் துடுப்பாட்ட அணித்தலைவர். துடுப்பாட்டத்தில் நீண்ட காலமாக ஈடுபட்டு பிரபல்யமான துடுப்பாட்ட வீரர்.

★ திரு. செல்வரத்தினம் இராதாகிருஸ்ணன் (மாப்பாணவூரி) 1964ம் ஆண்டுகளில் சுண்ணாகம் ஸ்கந்தவரோதயா கல்லூரி உதைபந்தாட்ட அணியின் சிறந்த கோல் காப்பாளர்.

★ திரு.செல்வரத்தினம் இராதா கோபாலன் (மாப்பாணவூரி) 1975ம் ஆண்டுகளில் யாழ்ப்பாண இந்துக் கல்லூரியின் சிறந்த கோல் காப்பாளர்.

★ திரு. த. சிவகுமார் (கோவளம்) 1978இல் யாழ் இந்துக் கல்லூரி உதைபந்தாட்ட அணித் தலைவர் 1978, 1979 துடுப்பாட்ட, ஹொக்கி, அணிகளின் பிரதி தலைவர். 1976இல் இலங்கை பத்திரிகை சம்மேளனம் நாடாளவிய ரீதியில் நடாத்திய துடுப்பாட்ட போட்டியில் பங்குபற்றிய யாழ் இந்துக் கல்லூரி அணி வீரர் யாழ் இந்துக் கல்லூரி இறுதிப் போட்டியில் கொழும்பு றோயல் கல்லூரியுடன் விளையாடி இரண்டாம் இடத்தைப் பெற்றது.

★ 1979ல் திரு.பாலசிங்கம் ஆனந்தகுமார் (அரசடிக்காடு) யாழ்ப்பாணக் கல்லூரியின் உதைபந்தாட்ட, துடுப்பாட்ட அணித்தலைவர்.

★ 1983ல் மயில்வாகனம் சிவராஜா (பலுகாடு) மகாஜானக் கல்லூரியின் உதைபந்தாட்ட அணித்தலைவர்.

★ 1986ல் கனகசபை சத்தியதாசன் (அல்லின் வீதி) மகாஜானக் கல்லூரியின் உதைபந்தாட்ட அணித்தலைவர்.

★ திரு. இராஜதுரை இரவீந்திரன் (கோவளம்) 1992 1996 ஆண்டுகளில் மொறட்டுவ பல்கலைக்கழகத்தில் பொறியியல் பீடத்தில் கற்கும் காலத்தில் மொறட்டுவ பல்கலைக்கழக உதைபந்தாட்ட அணி வீரர்.

★ திரு.தர்மலிங்கம் திருச்செல்வம் (திக்கரை) 1991 - 1994 ஆண்டுகளில் மொறட்டுவ பல்கலைக்கழகத்தில் பொறியியல் பீடத்தில் கற்கும் காலத்தில் மொறட்டுவ பல்கலைக்கழக உதைபந்தாட்ட அணித்தலைவர்.

★ திரு.கந்தையா கமலேந்திரன் (திக்கரை) சுந்தரமூர்த்தி நாயனார் வித்தியாலயம் கலாநிதி ஆ.தியாகராஜா மத்திய மகா வித்தியாலயத்தில் கல்வி பயின்று கொழும்பு டி.எஸ் சேனநாயக்கா கல்லூயில் கல்வி பயின்றவர். 1997ல் நாடாளவிய ரீதியில் நடைபெற்ற மைலோ வெற்றிக்கிண்ணத்திற்கான உதைபந்தாட்ட போட்டியில் பங்குபற்றியதன் மூலம் கல்லூரியில் இருந்து இலங்கை பாடசாலைகள் உதைபந்தாட்ட அணிக்கு தெரிவு செய்யப்பட்ட மூவரில் ஒருவர். மலேசியாவில் நடைபெற்ற மலேசியா பாடசாலைகள் அணியுடனும், இலங்கையில் நடைபெற்ற டுபாய் அணி, கர்கிஸ்தான் அணி, மாலைதீவு மாணவர்கள் இலங்கையில் கற்கும் றோயல் சர்வதேச பாடசாலை அணி, லண்டன் உயர்தர பரீட்சைக்கு தோற்றும் சர்வதேச பாடசாலை அணிகளுடன் இலங்கை பாடசாலைகள் உதைபந்தாட்ட அணி சார்பாக போட்டிகளில் பங்குபற்றியவர்.

உதைபந்தாட்டத்தில் தன்னை பயிற்றுவித்த ஆசிரியர் திரு. தம்பிராஜா சிவபாலனின் அனுசரணையுடனும் இலங்கை உதைபந்தாட்ட சம்மேளனத்தின் உதவியுடனும் காரைநகரில் உதைபந்தாட்டத்தை மேன்மைப்படுத்த திட்டம் ஒன்றை அறிமுகம் செய்ய திட்டமிட்டுள்ளதாக தெரிவித்தார்.

- திரு. க. சத்தியபாலன் (அல்லின் வீதி) மகாஜனக் கல்லூரி, சோலையான் விளையாட்டுக் கழக உதைபந்தாட்ட அணி வீரர். 2007இலிருந்து வடமாகாண கல்விப் பணிமனை உடற்கல்வி உதவிப் கல்விப் பணிப்பளாராக கடமையாற்றுகின்றார்.

விளையாட்டுத் துறை ரசிகர்கள், ஆர்வலர்கள் நல்கிய பங்களிப்பு விளையாட்டுத் துறை விருத்திக்கு ஒரு காரணமாகும். உதைபந்தாட்டப் போட்டிகளை ரசிப்பதற்கு ரசிகர் கூட்டமே இருந்தது. உதைபந்தாட்டப் போட்டிகளின் பின்னர் வீரர்களுக்கு நன்றி கூறுவதும் பாராட்டுவதும் பண்பாக இருந்தன. இன்றும் பலர் கடந்த கால விளையாட்டு நிகழ்வுகளை நினைவுகூர்ந்து உரையாடும் சம்பவங்களும் உண்டு. [illegible] வழக்கொழிந்து முகந்தெரியாத விளையாட்டு வீரர்களின் நிகழ்வுகளை தொலைக்காட்சியில் பார்ப்பதை வழக்காக்கியுள்ளோம்.

"HISTORY REPEATS" வரலாறு மீள் எழும் என்ற வாக்கியத்திற்கு அமைவாக கடந்து சென்ற பொற்காலத்தை எதிர் காலத்தில் உருவாக்க வரலாறு வழிகாட்டியாக அமையும் என்று நம்புகிறேன்.

A sound mind in a sound body

[illegible] தகவல்களையும், விளையாட்டில் ஈடுபட்டுள்ளோர், அக்கறை உள்ள ஆர்வலர்கள், காரைநகர் தொடர்பான ஆவணங்கள் மூலம் பெற்ற [illegible]களையும் கொண்டு கட்டுரை வரையப்பட்டுள்ளது. கட்டுரையை ஆக்க தகவல்களை வழங்கிய அனைவருக்கும் நன்றி கூறுகின்றேன். [illegible] வேண்டியவை, சேர்க்கப்படவேண்டியவை நிறைய இருக்கலாம். ஆக்கபூர்வமான ஆலோசனைகளை எதிர்பார்கின்றேன். தவறுகள் இருப்பின் தயவுடன் பொறுத்து அருள்வீர்கள் என்ற நம்பிக்கையுடன் நிறைவுறுகின்றேன்.



திரு. S. K. சதாசிவம் காரை இந்துக் கல்லூரியினதும் காரை விளையாட்டுக் கழகத்தினதும் கோல் காப்பாளர் என்ற நிலையில் பலருக்கு அறிமுகமானவர். 1977 தொடக்கம் 1991 வரையிலான காலப்பகுதியில் காரை விளையாட்டுக் கழகத்தை ஓர் உன்னத நிலையில் இயக்கியவர். யாழ் மாவட்ட வடகிழக்கு மாகாண மெய்வல்லுனர் உடற்பயிற்சி போட்டிகளை நடாத்துவதில் கல்வித் திணைக்களத்துடன் இணைந்து பணியாற்றியவர். 1991ஆம் ஆண்டு இடப்பெயர்வின் போது காரைநகர் பாடசாலைகளை காரைநகருக்கு வெளியே இயங்கச் செய்வதிலும் மிகவும் நெருக்கடியான 1999 முதல் 2002 வரையிலான காலப்பகுதியில் பரீட்சைத் திணைக்கள பரீட்சைகளையும் ஏனைய பரீட்சைகளையும் அனைத்து கல்விச் செயற்பாடுகளையும் வன்னி மாவட்டத்தில் சுமகமாக நடைபெற வெற்றிகரமாக செயற்பட்டு அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட அலுவலர். ஜேர்மன் தொழில்நுட்ப ஒத்துழைப்பகத்தின் (German Technical Cooperation GTZ ) வடகிழக்கு மாகாண செயற்றிட்டங்களில் கடந்த எட்டு ஆண்டுகளாக கடமையாற்றுகின்றார்.

## அமரர் சபாநடேசன் ரவிசங்கர் அவர்களிற்கு
## கனடா~காரை கலாச்சார மன்றத்தின் கண்ணீர் அஞ்சலி

கனடா-காரை கலாச்சார மன்றத்தில் இம்மன்றம் ஆரம்பிக்கப்பட்டது முதல் தொடர்ந்து பதினைந்து ஆண்டுகளாக தலைவராக பதவிவகித்து அளவிடற்கரிய பணிகளை ஆற்றிய திரு.சபாபதி சபாநடேசன் அவர்களதும் அவரது பாரியார் திருமதி. தனலட்சுமியினதும் புதல்வராகிய ரவிசங்கர் 24-04-2011இல் ஒட்டாவாவில் சிவமடைந்துள்ளார். அன்னாரின் பிரிவினால் துயருற்றிருக்கும் அன்னாரது மனைவி, பிள்ளைகள், பெற்றோர், உடன்பிறந்தோர், உறவினர், நண்பர்கள் அனைவருக்கும் கனடா-காரை கலாச்சார மன்றம் ஆழ்ந்த அனுதாபத்தையும், ஆறுதலையும் தெரிவித்துக்கொள்வதுடன் அன்னாரது ஆத்மா சாந்தியடைய சௌந்தராம்பிகை சமேத சுந்தரேஸ்வரப் பெருமானை இறைஞ்சுகின்றது.

### ஒல்லாந்தரைக் கவர்ந்த காரைநகர்

*இலங்கை ஒல்லாந்தர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த காலத்தில் சப்த தீவுகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயரினை இட்ட ஒல்லாந்தரால் காரைநகருக்கு இடப்பட்டபெயர் ஆம்ஸ்ரடாம் என்பதாகும். காரைநகரின் அமைப்பு, வடிவம், பொருளாதார முன்னெடுக்கை போன்ற இன்னோரன்ன பல சிறப்பம்சங்கள் பொருந்தியிருந்த காரணத்தினால் ஒல்லாந்து தேசத்தின் தலைசிறந்த நகரங்களுள் ஒன்றான ஆம்ஸ்ரடாம் என்ற பெயரையிட்டு அழைத்தார்கள் என்பது வரலாறு கூறும் உண்மையாகும்.*

## வாழ்வாதார உதவி வழங்கி சேவையாற்றும் யாழ் வர்த்தகர் சங்கம் காரைநகரின் பத்து குடும்பங்களிற்கு கோழிகள் விநியோகிக்கப்பட்டன

காரைநகரைச் சேர்ந்த பத்து வசதிகுறைந்த குடும்ப அங்கத்தவர்கள் தெரிவுசெய்யப்பட்டு அவர்கள் ஒவ்வொருவருக்கும் 25,000ரூபா பெறுமதிமிக்க நல்ல இனக் கோழிகளும் அவற்றினை அடைத்துவைத்து வளர்ப்பதற்குரிய கூடுகளும் யாழ் வர்த்தகர் சங்கத்தினால் விநியோகிக்கப்பட்டுள்ளன. காரைநகர் உ.அ.அதிபர் பணிமனையில் நடைபெற்ற இவ்வாழ்வாதார உதவி வழங்கும் நிகழ்விற்கு உ.அ.அதிபர் திரு. இ.த.ஜெயசீலன் தலைமை வகித்ததுடன் யாழ் வர்த்தகர் சங்கத் தலைவர் திரு.ஜெயசேகரம் பத்து பயனாளிகளிடத்திலும் கோழிகளையும், கூடுகளையும் கையளித்திருந்தார். யாழ் வர்த்தகர் சங்கத்தில் அங்கம் வகிக்கும் காரைநகரைச் சேர்ந்த பல வர்த்தகர்களும், காரை அபிவிருத்திச் சபை தலைவர், செயலாளர், மற்றும் உறுப்பினர்களும், யாழ் பல்கலைக்கழக வாழ்நாள் பேராசிரியர் பொ.பாலசுந்தரம்பிள்ளை அவர்களும் இந்நிகழ்வில் கலந்து கொண்டு பயனாளிகளை ஊக்குவித்து உற்சாகப்படுத்தியிருந்தனர். யாழ் மாவட்டத்திலுள்ள 15உ.அ.அதிபர் பிரிவுகளிலும் இதேமாதிரியான உதவித்திட்டம் யாழ் வர்த்தகர் சங்கத்தால் செயற்படுத்தப்பட்டமை குறிப்பிடத்தக்கதாகும்.

## யாழ்ற்ரன் அதிபர் சோமசேகரம் கோட்டக்கல்வி அதிகாரியாக பதவியுயர்வு பெற்றுச் சென்றுள்ளார்.

யாழ்ற்ரன் கல்லூரியின் அதிபராக குறுகிய காலமே பதவிவகித்த திரு.சோமசேகரம் ஊர்காவற்றுறை கோட்டக்கல்வி அதிகாரியாக பதவியுயர்வு பெற்றுச் சென்றுள்ளார். இவரது இடமாற்றத்தை தொடர்ந்து இக்கல்லூரியின் அதிபர் பதவிக்கான வெற்றிடத்தினை உடன் நிரப்ப நடவடிக்கை எடுக்கப்படவேண்டும் என கல்லூரிச் சமூகமும் காரை மக்களும் எதிர்பார்க்கின்றனர்.

## பாடசாலைகளின் தேவைகளும் நிறைவேற்றும் வழிவகைகளும் கோட்டக்கல்வி நிர்வாகத்தின் ஏற்பாட்டில் நடைபெற்ற கலந்துரையாடல்

காரைநகர் பாடசாலைகளின் தேவைகளும் அவற்றினை நிறைவேற்றிவைக்கும் வழிவகைகளும் குறித்த கருத்துப்பகிர்வு ஒன்று கோட்டக்கல்வி நிர்வாகத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டு கலாநிதி.ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய மண்டபத்தில் அண்மையில் நடாத்தப்பட்டிருந்தது. கோட்டக்கல்வி அதிகாரி திரு.ஸ்ரீவிக்கினேஸ்வரன் தலைமையில் நடைபெற்ற இக்கலந்துரையாடலில் அனைத்துப் பாடசாலைகளின் அதிபர்களும், காரை அபிவிருத்திச் சபையின் தலைவர், செயலாளர் உள்ளிட்ட நிர்வாகிகள் சிலரும் பங்கேற்றிருந்தனர்.

காரைநகரின் கல்வி விருத்திக்கு உதவி வருகின்ற புலம்பெயர் அமைப்புக்களுள் முன்னணியில் விளங்கும் கனடா-காரை கலாச்சார மன்றத்தின் உப-தலைவர் திரு.தர்மலிங்கம பரமசிவமும் இக்கருத்துப்பகிர்வு நிகழ்விற்கு அழைக்கப்பட்டு கலந்து கொண்டிருந்தார். அவசியமான தேவைகளை காரை அபிவிருத்திச் சபையூடாக தெரியப்படுத்தும் பட்சத்தில் அவற்றினை பரிசீலித்து நிறைவேற்றித்தர கனடா-காரை கலாச்சார மன்றம் தயாராகவிருப்பதாக திரு.தர்மலிங்கம் இங்கு தெரிவித்தார். பெரிய இரு கல்லூரிகளின் அபிவிருத்தியை இலகுவானதாகவும் தப்பபிப்பிராயங்கள் இன்றியும், பணவிரயம் இன்றியும் பயனுள்ளவகையில் சிறப்பாக முன்னெடுக்க பழைய மாணவர் சங்கங்கள் அமைக்கப்படுவது அவசியம் என காரை அபிவிருத்திச் சபைத்தலைவர் திரு.க.சோமசேகரம் குறிப்பிட்டதுடன் இச்சங்கங்கள் அமைக்கப்படும் பட்சத்தில் தமது சபை அவற்றுடன் ஒத்துழைத்து தேவையான உதவிகளை வழங்க முயற்சிக்கும் எனவும் கூறினார்.

## கேள்விக்குறியாக்கப்பட்டுள்ள காரைநகர் ப.நோ.கூ.சங்கத்தின் எதிர்காலம்: வறிய மக்களின் பாதிப்பை தடுக்க பொது அமைப்புக்கள் முன்வருமா?

ஒரு காலத்தில் யாழ் மாவட்டத்திலே திறம்படச் செயற்பட்ட சிறந்த ப.நோ.கூ சங்கங்களுள் ஒன்றாக விளங்கிய காரைநகர் ப.நோ.கூ.சங்கம் இன்று நஷ்டத்தில் இயங்குவதாக தெரிவிக்கப்படுகிறது. நிர்வாகத் திறமையின்மை, தனியார் வர்த்தகர்களின் போட்டி ஆகியனவே இதற்கு முக்கிய காரணங்களாக கருதப்படுகின்றன. காரைநகர் முழுவதும 13 விற்பனைக் கிளைகளைக் கொண்ட இச்சங்கத்தின் நிதிநிலை மோசமடைந்துள்ளதால் வசதி குறைந்த மக்களிற்கான உணவு நிவாரண விநியோகம், அத்தியாவசிய உணவுப் பொருட்களின் குறைந்த விலையிலான விற்பனை ஆகிய சேவைகள் பாதிக்கப்படக்கூடிய நிலை தோன்றியுள்ளது. சில சமயங்களில் அண்மையிலுள்ள சங்கானை ப.நோ.கூ.சங்கத்துடன் இச்சங்கம் இணைக்கப்படலாம் எனவும் கூறப்படுகிறது. எனவே காரைநகர் ப.நோ.கூ.சங்கத்தின் எதிர்காலம் கேள்விக்குறியாகிவிட்ட நிலையில் அதன் நிதிநிலையை சீர்செய்து வறிய மக்களுக்கான சேவை தடைப்படாதிருக்க நடவடிக்கை எடுப்பதற்கு காரைநகரிலுள்ள பொது அமைப்புக்களும், சமூக ஆர்வலர்களும் உடன் முன்வரவேண்டும் என காரை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். இது விடயத்தில் காரை அபிவிருத்திச் சபை சில நடவடிக்கைகளை மேற்கொள்ள திட்டமிட்டுள்ளதாக அறிவித்துள்ளது.

## காரை அபிவிருத்திச் சபையுடன் ஓர் சிறப்பு நேர்காணல்

*நேர்காணல் கண்டவர்: கனக. சிவகுமாரன்*

காரை அபிவிருத்திச் சபையின் தலைவராக பதவி வகிப்பவர் மகாராணி சோமு என காரைநகர் மக்களால் நன்கு அறியப்பட்ட திரு.க.சோமசேகரம் ஆவார். அகில இலங்கை சமாதான நீதிவான் பட்டத்தைப் பெற்றுக்கொண்டவர். வியாவில் ஐயனார் ஆலய பரிபாலன சபையின் தலைவராகவும் செயற்பட்டு ஆலய நிர்வாகத்தை செவ்வனே நடாத்தி வருபவர். செயலாளராக பதவி வகிப்பவர் விளையாட்டுத் துறையில் சாதனை புரிந்து காரைநகருக்கு பெருமை சேர்த்த அமரர் இரத்தினகோபால் அவர்களின் புதல்வர் திரு.ஜெயராசா ஆவார். யாழ்நகரில் பிரபல்யம் மிக்க Super Shoes என்கின்ற வர்த்தக நிறுவனத்தை சொந்தமாக நிர்வகித்து வருபவர். யாழ் வர்த்தகர் சங்கத்தின் செயலாளராகப் பணிபுரிந்த சிறப்புக்குரியவர். ஈழத்துச் சிதம்பர அடியார் சபையின் தலைவராகவும் பணியாற்றி வருபவர். இவர்கள் இருவருடனும் தொலைபேசி மூலமாக தொடர்புகொண்டு சபையின் செயற்பாடுகள் தொடர்பில் கேட்கப்பட்ட கேள்விகளையும் அவற்றிற்கு அவர்களால் வழங்கப்பட்டிருந்த பதில்களையும் அப்படியே தருகின்றோம்.

**கேள்வி: காரை அபிவிருத்திச் சபையின் நிர்வாகத்தை தாங்கள் பொறுப்பேற்றுக் கொண்டபோது பல முன்னேற்றகரமான மேம்பாட்டுத் திட்டங்கள் முன்னெடுக்கப்படும் என்ற நம்பிக்கையும், எதிர்பார்ப்பும் அனைவரிடமும் குறிப்பாக புலம்பெயர் வாழ் காரை மக்களிடம் காணப்பட்டது. தங்களது பதவிக் காலத்தின் காற்பகுதி பூர்த்தியான நிலையில் குறிப்பிடத்தக்க திட்டங்கள் எதனையும் முன்னெடுக்காதது சற்று ஏமாற்றம் அளிப்பதாகப் பேசப்படுவது குறித்த தங்களது கருத்துக்களை அறிந்து கொள்ளலாமா?**



பதில்: திரு.சோமசேகரம்: நீங்கள் கருதுகின்ற ஏமாற்றம் என்பது ஏற்றுக்கொள்ளப்படவேண்டிய உண்மையேயாகும். அதே வேளையில் இவ் ஏமாற்றமானது எங்களுக்குமே என நாமே கூறுவது ஆச்சரியத்தை ஏற்படுத்தலாம். நாம் விழிப்பாகவிருந்து செயற்பட்டுக் கொண்டுதான் உள்ளோம். ஆனாலும் பெரிய பணிகளை உடன் முன்னெடுக்க முடியாமைக்கு நாம் எதிர்பார்க்காத பல காரணங்கள் உள்ளன. இச்சபையினை நாம் பொறுப்பேற்றுக் கொண்ட பின்னரே பல்வேறுவகையான சவால்களை எதிர்கொண்டு உள்ளக நிர்வாக ஏற்பாடுகளை சீர்செய்து இச்சபையினை ஓர் ஸ்திரமானதும் ஆரோக்கியமானதுமான நிலைக்கு மாற்றியமைக்க கடந்த காலங்களில் கூடுதலான கவனத்தை செலுத்த வேண்டியிருந்தது. அதேவேளையில் முன்புபோலல்லாது மிகவும் நிதானமாகவும், திட்டமிட்ட வகையிலும் செயற்பட்டே தேவைகளை இனம்காணவேண்டிய சூழ்நிலை தற்போது நிலவுவதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். இதன் மூலமாக வீண் விரயங்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. எனவே ஏற்பட்ட ஏமாற்றமானது தற்காலிகமானதே என்பதுடன் இது எமது மண்ணின் நீண்ட கால அபிவிருத்திக்கான அடித்தளமாக அமையும் என்றே கருதுகின்றோம்.

**கேள்வி: கனடா-காரை கலாச்சார மன்றமானது காரைநகரின் அபிவிருத்திப் பணிகளிற்கு உதவுவதற்கு மிகுந்த அக்கறையும் ஆர்வமும் கொண்டுள்ளபோதிலும் தேவைகளை இனம்கண்டு குறுகியகால அல்லது நீண்டகாலத் திட்டங்கள் உரியமுறையில் முன்வைக்கப்படுவதில்லை என்கின்ற ஆதங்கம் இருந்து வருவது குறித்த தங்களது விளக்கம் என்ன?**

பதில்: ஜெயராசா: தங்களது ஆதங்கம் நியாயமானது. ஆனால் தற்போதய யதார்த்த நிலை சற்று சிந்திக்கத் தூண்டுகின்றது. அரச மற்றும் அரச சார்பற்ற அமைப்புக்கள் பல மில்லியன் ரூபா செலவிலான அபிவிருத்தித் திட்டங்களிற்கு உதவ முன்வந்து கொண்டுள்ளன. இந்நிலையில் பொதுமக்களின் பணத்தை முடக்குவதற்கோ அன்றி விரயம் செய்வதற்கோ நாம் தயாரில்லை. அதேவேளையில் உதவிகள் கிடைக்க முடியாது எனக் கருதும் திட்டங்கள் சிலவற்றை வகுத்து செயற்படுத்த எண்ணியுள்ளோம். காரைநகருக்குள்ளேயே குடிநீரைப் பெற்றுக்கொள்ளும் திட்டம் மக்களுக்கான வாழ்வாதார உதவித்திட்டம் ஆகிய நீண்டகாலத் திட்டங்களை முன்னெடுக்கும் ஆரம்ப நடவடிக்கையில் தற்போது ஈடுபட்டுள்ளோம். இவற்றிற்கு புலம்பெயர் காரை அமைப்புக்கள் உதவும் என்ற நம்பிக்கை எமக்குண்டு.

**வாழ்வாதார உதவித்திட்டம்** - காரைநகரில் குறிப்பிடத்தக்க சுமாரான குடும்பங்கள் சுயதொழிலில் ஈடுபட்டு தமது பொருளாதார நிலையை உயர்த்தி வறுமை நிலையைப் போக்க எண்ணியிருந்தாலும் அதற்கான வசதி வாய்ப்புக்களோ அன்றி உதவிகளோ இல்லாதுள்ளனர். முதற்கட்டமாக நூறு குடும்பங்கள் தெரிவுசெய்யப்பட்டு ஒவ்வொரு குடும்பத்திற்கும் இலகு முறையில் மீளச் செலுத்தப்படக்கூடியவகையில் இரண்டு இலட்சம் ரூபா கோழி வளர்ப்புக் கடனாக வழங்குவதுடன் இதன்மூலமாக அவர்களால் அமைக்கப்படும் கோழிப்பண்ணைகளிற்கு தேவையான உணவு விநியோகம் நோய்த்தடுப்பு மற்றும் மருத்துவ ஏற்பாடுகள், முட்டை, இறைச்சி ஆகியனவற்றை சந்தைப்படுத்தல் போன்ற வசதிகளை ஏற்படுத்திக் கொடுப்பதன்மூலம் சிலர் வேலைவாய்ப்பினையும் பெற்றுக்கொள்ளமுடியும்.

காரைநகர் ப.நோ.கூ.சங்கத்தின் நிதிநிலை கவலையளிப்பதாகவுள்ளது. இதனால் வறிய மக்களுக்கான நிவாரண விநியோகம், உணவுப்பொருள் விநியோகம் ஆகிய செயற்பாடுகளில் தடங்கல் ஏற்பட்டு வறியமக்கள் பாதிப்புக்குள்ளாகக் கூடிய துயர நிலை ஏற்படவுள்ளது. எனவே இதனை தடுத்து ப.நோ.கூ.சங்கத்தின் வறிய மக்களிற்கான சேவை தடைப்படாதிருக்க நிதியம் ஒன்று ஆரம்பிக்கப்படுவது அவசரமும் அவசியமுமாகும். இந்நிதியத்திற்கு உதவுவோர் தமது பணத்தை பத்து வருடங்களில் மீளப்பெற வழிவகை செய்யப்படும். மேற்கூறப்பட்ட திட்டங்களை செயற்படுத்த புலம்பெயர் மக்களின் உதவிகளை எதிர்பார்க்கின்றோம்.

**கேள்வி: தற்போது பல்வேறு அபிவிருத்திப் பணிகளை அரச மற்றும் தொண்டு நிறுவனங்கள் மேற்கொண்டு வரும் நிலையில் அவற்றின் நிதி ஒதுக்கீடுகள் சாத்திமற்ற பணிகளை அல்லது தேவைகளை எப்படி நீங்கள் இனம் கண்டுகொள்கின்றீர்கள்.**

பதில்: திரு.சோமசேகரம்: வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் எமது போஷகராக பதவி வகிப்பவர். அவர் தம்மால் இயன்றளவு உதவிகளை காரைநகரின் கல்வி அபிவிருத்திக்கு நல்கி வருகின்றார். அரசினால் உதவமுடியாத உடனடி அவசிய கல்விசார்ந்த தேவைகளை எம்முடன் தொடர்பு கொண்டு அவற்றை நிறைவேற்றிவைக்க எமக்கு ஒத்துழைப்பு வழங்கி வருகின்றார். அதேபோன்று காரைநகர் உ.அ.அதிபர் மூலமாக காரைநகரின் ஏனைய தேவைகளை அறிந்து கொள்வதுடன் அவரது சிபார்சுகளையும், கோரிக்கைகளையும் ஏற்று பல பணிகளை நிறைவு செய்துள்ளோம்.முக்கியமாக குறைநிரப்பு வேலைகளிற்கான உதவிகளும் எம்மால் வழங்கப்பட்டுள்ளன. உதாரணமாக உ.அ.அதிபர் பணிமனையால் நிர்மாணிக்கப்படவுள்ள கலாச்சார மண்டபத்தின் அமைவிடத்திற்கான காணி ஒன்றினை நான்கு இலட்சம் ரூபாவிற்கு கொள்முதல் செய்து அன்பளிப்புச் செய்துள்ளோம். இத்தொகை சபை உறுப்பினர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளப்பட்ட நன்கொடை என்பது குறிப்பிட்டுக் கூறவேண்டியதாகும்.

**கேள்வி: காரைநகரின் மிக முக்கியமான பிரச்சினை குடிநீர்த்தட்டுப்பாடாகும். இப்பிரச்சினைக்கு நிரந்தரத்தீர்வு காணக்கூடிய வகையிலான ஓர் திட்டத்தை சம்பந்தப்பட்ட நிபுணர்களின் ஆலோசனையைப் பெற்று தயாரித்து முன்வைப்பதன் மூலம் ஒருங்கிணைந்த உதவிகளை அரசாங்கம், தொண்டுநிறுவனங்கள், புலம் பெயர் அமைப்புக்கள் ஆகியவற்றிடமிருந்து பெற்றுக்கொள்ள முடியும் என நீங்கள் கருதவில்லையா?**

பதில்: திரு.சோமசேகரம்: ஆம். குடிநீருக்கான நீண்டகாலத் திட்டம் ஒன்று சம்பந்தப்பட்ட நிபுணர் குழுவினால் தயாரிக்கப்பட்டு வருகிறது. திட்டத் தயாரிப்பு பூர்த்தியானதும் அதனைச் சமர்ப்பித்து உதவிகளைக் கோரவுள்ளோம். தற்போது மக்களிற்கான குடிநீர் விநியோகம் லண்டன்-காரை நலன்புரிச் சங்கத்தின் இரு பௌசர்கள் மூலமாக எவ்வித தடங்கலுமின்றி திருப்திகரமாக எம்மால் மேற்கொள்ளப்பட்டுவருகிறது.

**கேள்வி: காரைநகரின் கல்வி, கலை, விளையாட்டு ஆகிய துறைகளிலும் முன்பள்ளிகளின் செயற்பாட்டிலும் வாரிவளவு நல்லியக்கச் சபை பாரிய பங்களிப்பு செய்திருந்தமை தற்போது பலராலும் உணரப்படுகிறது. குறிப்பாக இச்சபையின் செயலாளராக இருந்து அர்ப்பணிப்போடு செயலாற்றிய திரு.பத்மநாதனின்(பட்டு மாமா) பணிகள் மறக்க முடியாதன. எனவே அவர் விட்டுச் சென்ற பணிகளை தொடர்வதன் மூலம் இடப்பெயர்வின் காரணமாக பின்தள்ளப்பட்ட மேற்குறித்த துறைகளை முன்னேற்ற முடியுமல்லவா?**

பதில்: திரு.சோமசேகரம்: ஆம் நீங்கள் குறிப்பிடுவது அனைத்தும் நிச்சயம் உண்மையானவை. இன்றைய புகழ்பூத்த காரைநகரின் பெருமை சொல்லும் கலைஞர்கள், கவிஞர்கள், கல்விமான்கள், விளையாட்டுத்துறை வல்லுனர்கள் பலரையும் வளர்த்த பெருமை வாரிவளவு நல்லியக்கச் சபையையே சாரும். இப்பணியை மேற்கொண்ட பட்டு மாமாவின் சேவை மகத்தானது. அவர் விட்டுச் சென்ற பணிகளை எமது சபை மூலமோ அல்லது வேறு வழிகளிலோ தொடர்வதற்கு நாம் நடவடிக்கை எடுக்கவுள்ளோம்.

**கேள்வி: கனடா-காரை கலாச்சார மன்றத்திற்கும் உங்களிற்குமான தொடர்பு எப்படியுள்ளது? காரை ஒளி சஞ்சிகை தொடர்பாக உங்களது அபிப்பிராயம் என்ன?**

பதில்: திரு.ஜெயராசா: தற்போது எமது சபையுடன் தங்களது மன்றமும், லண்டன்-காரை நலன்புரிச் சங்கமும் மட்டுமே தொடர்பில் உள்ளன. நம்பிக்கை நல்லெண்ணம் ஆகியவற்றின் அடிப்படையில் மிக நெருங்கிய உறவு எமக்கும் இவ்விரு அமைப்புக்களுக்குமிடையே இருந்து வருகிறது. பிறந்த மண்ணை மறவாத கனடா-காரை கலாச்சார மன்றத்தின் பணியைப் பாராட்டுகின்றோம். அத்துடன் கனடாவில் வதியும் காரைநகரின் எதிர்காலச் சந்ததி தமிழ் மொழியையும், கலை, கலாச்சாரத்தையம் பின்பற்றக்கூடியவகையிலான மன்றத்தின் செயற்பாடுகள் போற்றுதற்குரியன. காரை ஒளி சஞ்சிகையை இணையத்தளத்தில் மட்டுமே பார்க்க முடிந்தது. இதன் பிரதிகள் காரைநகரில் உடன் கிடைக்க முடியாத குறையை நீக்கவேண்டும். இங்குள்ள பொது அமைப்புக்கள், வாசிகசாலைகள் பாடசாலைகள் ஆகியன இச்சஞ்சிகையை பெறத்தக்க ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும். இதன் மூலமே எமது உறவுப்பாலம் வலுப்பெற வாய்ப்புண்டு. குறைந்தது இருநூறு பிரதிகளாவது கிடைக்க வழிசெய்வீர்கள் என நம்புகின்றோம். வாழ்க காரை ஒளி! வளர்க அதன் ஊர்ப் பணி.

**கேள்வி: கனடா வாழ் காரைநகர் மக்கள் ஊர் மண்ணின் நினைவுகளுடனும், காரை வாழ் உறவுகளிற்கு உதவும் சிந்தனையுடனும் இருந்து கொண்டுள்ளார்கள். ஊர் உறவுகளின் இன்றய மனநிலை எப்படிப்பட்டதாகவுள்ளது?**

பதில்: திரு.சோமசேகரம்: கனடா வாழ் காரை மக்கள் எமது சகோதர உறவுகள். மண்ணை மறவாது உதவவேண்டும் என்ற ஆர்வத்தோடு இருப்பதையிட்டு உளம் பூரிப்படைகின்றோம். எமது காரை வாழ் உறவுகளின் உளநிலை பெரும்பாலும் ஏதோ இருக்கிறம் என்றவாறாகத் தானுள்ளது. ஆனாலும் சொர்க்கமே என்றாலும் அது நம்மூரைப் போல வருமா என்ற மனநிறைவுடன் வாழ்ந்து கொண்டுள்ளார்கள். இதுவே உண்மை நிலை.

**கேள்வி: மக்களின் உண்மையான பயன்பாடுகளிற்கான வேலைத்திட்ட முன்னெடுப்புக்களே புலம்பெயர் வாழ் மக்களின் நம்பிக்கையைப் பெற்று அவர்களின் உதவிகளை மேலும் பெறுவதற்கு ஏற்ற சூழ்நிலையை தோற்றுவிக்கும் என்ற வகையில் உங்களது எதிர்காலத் திட்டங்களும், செயற்பாடுகளும் முன்னேற்றகரமானதாக அமையும் என எதிர்பார்க்கலாமா?**

பதில்: திரு.சோமசேகரம்: நிச்சயமாக! நம்பிக்கை தானே வாழ்க்கை.

## ஈழத்துச் சிதம்பர ஆலய திருப்பணியில் எதிரும் புதிருமாக ஈடுபட்ட இரு சபைகளும் ஒன்றுசேர்ந்தன: பரவசத்தில் ஆலய பக்தர்கள்

ஈழத்துச் சிதம்பர ஆலயத்தின் வளர்ச்சி என்கின்ற ஒரே நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு இதுவரை காலமும் வெவ்வேறு திசைகளில் செயலாற்றி வந்த இரு அமைப்புக்களான அடியார் சபை, திருப்பணிச்சபை ஆகியனவற்றின் உறுப்பினர்கள் தமக்கிடையேயான கருத்து வேறுபாடுகளை சுமுகமாகத்தீர்த்துக் கொண்டதுடன் ஈழத்துச் சிதம்பர அடியார் சபை என்கின்ற ஒரே அமைப்பாக செயற்பட்டு ஆலயத்தின் திருப்பணிகளை முன்னெடுப்பதற்கு உறுதிபூண்டுள்ளதான செய்தி அடியார்களிற்கும் காரைநகர் மக்களிற்கும் பெருமகிழ்வைக் கொடுப்பதாக அமைந்துள்ளது. காரைநகர் மக்களுக்கு மட்டுமன்றி ஈழத்து சைவ மக்கள் அனைவருக்கும் பொதுவான புனித தலமாக விளங்கும் இவ்வாலயத்தின் அனைத்து வளர்ச்சிப் பணிகளும் துரிதமாகவும் தடங்கலின்றியும் முன்னெடுக்கப்படும் என்கின்ற உறிதியான நம்பிக்கையை இவ்விரு சபைகளின் ஒன்றிணைவு ஏற்படுத்தியுள்ளது.

## அடியார் சபைக்கு புதிய நிர்வாகம் தெரிவானது.

அடியார் சபைக்கு புதிய நிர்வாகத்தினைத் தெரிவு செய்வதற்கான பொதுக்கூட்டம் சென்ற 06-03-2011இல் ஈழத்துச் சிதம்பர தேவஸ்தான வசந்த மண்டபத்தில் மிகவும் சுமுகமான சூழ்நிலையில் சபையின் இடைக்காலத் தலைவர் திரு.இ.ஜெயராசா தலைமையில் நடைபெற்றபோது பின்வருவோர் நிர்வாக சபையில் இடம்பெற ஏகமனதாகத் தெரிவு செய்யப்பட்டனர்.

தலைவர்: திரு.இரத்தினகோபால் ஜெயராசா

உப-தலைவர்: திரு. மனோகரன்

செயலாளர்: திரு.தியாகராஜா பரமேஸ்வரன்

உப-செயலாளர்: திரு சற்குணராசா

பொருளாளர்: திரு.சுப்பிரமணியம் கிருபாரத்தினம்

உப-பொருளாளர்: திரு.மு.நடராசா

ஆ[illegible]ர்த்தாக்களான திரு.ஆ.அம்பலவிமுருகன், திரு.மு.சுந்தரலிங்கம் ஆகியோரை உள்ளடக்கிய பதினாறு பேர் நிர்வாகசபை உறுப்பினர்களாக தெரிவாகினர்.

## ஊரி ஆரம்ப பாடசாலையின் அபிவிருத்திக்கு முப்பது இலட்சம் ரூபா ஒதுக்கீடு

[illegible]ாரைநகர் ஊரி அ.மி.த.கலவன் பாடசாலையில் வகுப்பறைகளைக் கொண்ட கட்டிடம் ஒன்றை நிர்மாணிக்கும் பொருட்டு முப்பது [illegible] ரூபாயினை வடமாகாணக் கல்வித்திணைக்களம் ஒதுக்கியுள்ளதாக கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் [illegible]துள்ளார். இதேவேளையில் அண்மையில் மீள ஆரம்பிக்கப்பட்டு பல குறைபாடுகள் நிலவுகின்ற தோப்புக்காடு மறைஞான சம்பந்த [illegible]ாசாலையில் அவசர அடிப்படை வேலைகளை மேற்கொள்ளும் பொருட்டு அரச சார்பற்ற நிறுவனம் ஒன்றினால் ஏழு இலட்சம் ரூபா [illegible]ங்கப்படவுள்ளதாகவும் கல்விப் பணிப்பாளர் மேலும் தெரிவித்தார்.

## சிறப்புற நிகழ்ந்த மெய்கண்டான் பரிசளிப்பு விழா

காரைநகர் மெய்கண்டான் வித்தியாலயத்தின் வருடாந்த பரிசளிப்பு விழா 21-02-2011இல் வித்தியாலய அதிபர் திருமதி.புஷ்பராணி [illegible]ங்கராசா அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. தீவக வலய திட்டமிடல் கல்விப் பணிப்பாளர் திரு.ஜோன் குயின்சன்ஸ் இவ்விழாவின் பிரதம விருந்தினராக கலந்துகொண்டிருந்தார்.

ஆரம்ப பாடசாலையான இவ்வித்தியாலயத்தின் கல்வி, கல்விசாராச் செயற்பாடுகளில் திறன்மிக்க மாணவர்கள் இவ்விழாவின் மூலமாக பரிசில்கள் வழங்கப்பட்டு ஊக்குவிக்கப்பட்டனர்.

## காரை மக்களின் நன்மதிப்பைப்பெற்ற உ.அ.அதிபர் ஜெயசீலன்

காரைநகர் உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் தனது சேவையுணர்வுடனான பணியின் மூலமாக காரை மக்களின் நன்மதிப்பையும் அபிமானத்தையும் பெற்று விளங்குகின்றார். இடப்பெயர்வினாலும் யுத்த சூழ்நிலையாலும் கடும் பாதிப்புக்குள்ளாகி மீளக்குடியமர்ந்த மக்களுடைய அவலங்களை தீர்த்து வைக்கின்ற நடவடிக்கைகளிலும், இம்மக்கள் ஓர் ஸ்திரமான வாழ்வை அமைத்துக் கொள்வதற்கான பல்வேறுபட்ட உதவிகளை



அரசிடமிருந்து மட்டுமல்லாது பல தொண்டர் அமைப்புக்களிடமிருந்து பெற்று வழங்கி வருவதுடன் காரைநகரின் அபிவிருத்தியை சிறப்பாக முன்னெடுப்பதற்கு சம்பந்தப்பட்டவர்களுடனும், காரை அபிவிருத்திச் சபை உள்ளிட்ட அனைத்து அமைப்புக்களுடனும் நெருங்கிய தொடர்பைக் கொண்டிருப்பதுடன் ஆக்கபூர்வமான ஒத்துழைப்பையும் நல்கி வருகின்றார். காரைநகர் மக்களின் நல்ல இயல்புகளோடு அவர்களிடத்துக் காணப்படுகின்ற சில பலவீனங்களையும் நன்கு அறிந்து கொண்டுள்ள திரு.ஜெயசீலன் எத்தகைய பிரச்சினைகளானாலும் அவற்றினை எதிர்கொண்டு சிறந்த ஆளுமையோடு அணுகி தீர்த்துவைத்து மக்களின் பாராட்டிற்குரிய நிர்வாக சேவை அதிகாரியாக விளங்குகின்றார். இளவயதும் சுறுசுறுப்பும் மிக்க இவரது பணி காரை மக்களிற்கு கிடைக்கப் பெற்றமை அவர்களது அதிஷ்டம் என்றே கூறவேண்டும். காரைநகரின் தனித்துவத்தையும் சிறப்பையும் பேணும் வகையில் ஓர் கொடியினை உருவாக்கியதுடன் கீதம் ஒன்றினையும் கவிஞராகவும் விளங்கும் இவரே இயற்றி இசையும் அமைப்பித்துள்ளார்.

# கல்விப் பணிப்பாளர் விக்கினேஸ்வரனின் முயற்சியின் விளைவு வடக்கின் முதலாவது நவீன நூலகம்(Digital Library) காரைநகரில் அமைகிறது

காரைநகரில் ஏற்பட்ட பாரிய இடப்பெயர்வு பல்வேறு பாதிப்புக்களை ஏற்படுத்தியிருப்பினும் இங்குள்ள கல்வியாளர்கள் முனைப்போடும் அக்கறையோடும் ஆற்றிவரும் பணிகள் காரைநகரின் துரித கல்வி முன்னேற்றத்திற்கு உதவி வருகின்றன. கல்விப் பணியில் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயத்தின் பங்களிப்பு என்பது அளவிடற்கரியது. இன்று இப்பாடசாலையின் அதிபாராக கடமையாற்றும் திரு.பொன். சிவானந்தராசா பாடசாலை முன்னேற்றத்திற்கு எடுத்துவரும் முனைப்பான செயற்பாடுகள் போற்றுதற்குரியன. இவரது செயற்பாடுகளிற்கு காரைநகரின் கல்வியாளர்களும், புலம்பெயர் அமைப்புக்களும் உறுதுணையாக இருந்து ஆதரவளித்து வருகின்றன. வடமாகாணக் கல்விப் பணிப்பாளரும் காரைநகரின் கல்வியில் ஆர்வமும், அக்கறையும் கொண்டு உழைத்துவருபவர் காரையின் மைந்தன் திரு.ப.விக்கினேஸ்வரன் அவர்கள்.இவர் ஆசிரியராக பணியாற்றிய காலகட்டத்தில் இவரிடம் கணிதபாடம் பயின்ற பலர் சிறப்புச் சித்திகள் பெற்றிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.தீவக வலய கல்விப் பணிப்பாளராக கடமையாற்றியபோது காரைநகர் பாடசாலைகளின் முன்னேற்றத்திற்கு பல உதவிகளை செய்திருந்தவர்.விசேடமாக ஆசிரியர் பற்றாக்குறை என்ற வார்த்தை உச்சரிக்கப்படும் நிலையை இல்லாதொழித்தவர்.இவர் எடுத்துக்கொண்ட தீவிர முயற்சியின் பயனாக தியாகராஜா ம.ம.வித்தியாலயத்தில் நவீன நூலகம் (Digital Library) அமைக்கும் பொருட்டு வடமாகாணக் கல்வித் திணைக்களம் ஒன்பது மில்லியன் ரூபாயினை ஒதுக்கியுள்ளது. கல்வித்திணைக்களத்தின் அனுசரணையுடன் வடமாகாணப் பாடசாலை ஒன்றில் முதன்முதலாக அமையும் நவீன நூலகம் இதுவென்பது குறிப்பிடத்தக்கதுடன் இலங்கையிலுள்ள நான்காவது நூலகமாகவும் அமையவுள்ளது. இதன் மூலமாக இப்பாடசாலையின் கல்விச் செயற்பாட்டில் முன்னேற்றகரமான மாற்றம் ஏற்பட வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. தீவக வலயத்தில் முதற்தர பாடசாலையாக விளங்கும் இப்பாடசாலையை யாழ் மாவட்டத்தில் கல்வித்தரம் மிக்க ஒன்றாக விளங்க வைக்கும் முயற்சியின் ஓர் படிக்கல்லாக இந்நூல் நிலையத்தின் உருவாக்கம் அமையும் என எதிர்பார்க்கலாம்.

## நவீன நூலகத்திற்கான அடிக்கல்லை கல்விப் பணிப்பாளர் விக்கினேஸ்வரன் நாட்டினார்

நவீன நூல் **(Digital Library)** நிலையக் கட்டிடத்திற்கான அடிக்கல் 28.04.2011இல் வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் அவர்களால் நாட்டப்பட்டு நிர்மாணப்பணிகள் சம்பிரதாயபூர்வமாக ஆரம்பித்து வைக்கப்பட்டுள்ளன. அதிபர் பொன்.சிவானந்தராசா தலைமையில் நடைபெற்ற இவ்வைபவத்தில் தீவக வலய கல்விப் பணிப்பாளர் திரு.வ.இராதாகிருஸ்ணன் காரைநகர் கோட்டக்கல்விப் பணிப்பாளர் திரு.ஸ்ரீவிக்கினேஸ்வரன் ஆகியோருடன் பாடசாலை மாணவர்கள் ஆசிரியர்கள் பொதுமக்கள் என பலர் கலந்து கொண்டனர். தற்போது இக்கட்டிட நிர்மாணப்பணிகள் இரவுபகலாக துரித வேகத்தில் நடைபெற்றுவருவதுடன் இப்பணிகள் யாவும் பூர்த்திசெய்யப்பட்டு யூலை மாத நடுப்பகுதியில் நூலகத் திறப்பு விழாவினை நடாத்த திட்டமிட்டுள்ளதாக அதிபர் பொன்.சிவானந்தரசா தெரிவித்தார்.

## வியப்பின் எல்லைக்கு அழைத்துச் சென்ற காரை கிட்ஸ்பார்க் முன்பள்ளி சிறார்களின் கலை விழா

காரைநகரில் நவீன கற்றல் முன்பள்ளியாக விளங்குகின்றதும் சுப்பிரமணியம் வீதியில் அமைந்துள்ளதுமான காரை கிட்ஸ் பார்க் முன்பள்ளியின் ஆண்டு விழா வெகு சிறப்பாக ஒழுங்கமைக்கப்பட்டு அனைவரதும் பாராட்டுக்களைப் பெற்றுக்கொண்டது. துள்ளித்திரியும் இப்பள்ளியின் சிறார்கள் மிகுந்த கட்டுப்பாட்டுடனும், ஒழுக்கத்துடனும் நடந்துகொண்டு திறம்பட வழங்கிய கலை நிகழ்வுகளைப் பார்வையிட்ட பார்வையாளர்களும், விருந்தினர்களும் வியப்பின் எல்லைக்கே சென்றுவிட்டனர் என்று கூறலாம். சிறார்களின் பெற்றோர் பெருமிதத்தால் பூரிப்படைந்திருந்தனர்.சிறார்களின் ஆற்றலை ஒருங்கிணைத்து பயிற்றுவித்த ஆசிரியர்களின் திறமை பாராட்டப்பட்டது. மழலைமொழி பேசும் சின்னஞ்சிறார்களின் கவர்ச்சி மிகு பான்ட் இசை அணிவகுப்புடன் ஆரம்பித்த இவ் ஆண்டுவிழா கிட்ஸ்பார்க் தலைவர் திரு.நேத்திரானந்தன் தலைமையில் இடம்பெற்றது. பிரதம விருந்தினராக வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் அவர்களும், சிறப்பு விருந்தினராகஅழைக்கப்பட்டிருந்த திருமதி.விஜயகலா மகேஸ்வரன் பா.உ சமூகமளிக்கமுடியாத நிலையில் அவரின் சார்பில் திரு.கணேசபிள்ளை பாலச்சந்திரனும், கௌரவ விருந்தினர்களாக யாழ்ற்ரன் கல்லூரி அதிபர் திரு.க.சோமசேகரம், சமூகப் பற்றாளர் மனிதநேய ஈகையாளன் திரு.ஈ.எஸ்.பி.நாகரத்தினம், முன்னாள் அதிபர் பண்டிதர் மு.சு.வேலாயுதபிள்ளை ஆகியோரும் பெருந்திரளான பொதுமக்களும் கலந்துகொண்டு விழாவினை மகிமைப்படுத்தினர்.

## கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய விளையாட்டு மைதானம் அகலிக்கப்படவுள்ளது

காரைநகர் தியாகராஜா ம.ம.வித்தியாலய விளையாட்டு மைதானத்தின் வடக்கு எல்லையின் சுமார் எழுபத்தைந்து மீற்றர் நீளப்பகுதி ஐந்து மீற்றர் அகலத்திற்கு காரைநகர் பிரதேச வைத்தியசாலைப் பக்கமாக உள்நகர்த்தப்பட்டு அகலிக்கப்படவுள்ளது. இதற்கான அனுமதியை வடமாகாண ஆளுனர் திரு.ஜி.சந்திரசிறி வழங்கியுள்ளதைத் தொடர்ந்து சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பாராளுமன்ற உறுப்பினர் திருமதி விஜயகலா மகேஸ்வரனுடன் சென்று மைதானத்தைப் பார்வையிட்டு அளவீடு செய்துள்ளதுடன் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டு அகலிக்கும் பணி விரைவில் பூர்த்தி செய்யப்படவுள்ளது.இதன்மூலம் மைதானம் விசாலமாக அமைவதுடன் உதைபந்தாட்ட முன்னணி வீரர்கள் வைத்தியசாலை மதிலுடன் மோதக்கூடிய அபாய நிலை நீங்கப்பெறவுள்ளது.

## பல்வேறு இடங்களிற்கும் விஜயகலா மகேஸ்வரன் பா.உ விஜயம்: குறைகளைக் கேட்டறிந்ததுடன் தீர்த்து வைக்கவும் உறுதி



யாழ்றரன் கல்லூரிக்கு திடீர் விஜயம் ஒன்றை மேற்கொண்ட பாராளுமன்ற உறுப்பினர் திருமதி.விஜயகலா மகேஸ்வரன் அதிபர்,ஆசிரியர்கள்,மாணவர்கள் ஆகியோருடன் பாடசாலையின் தேவைகள் தொடர்பில் கலந்துரையாடியதுடன் பாடசாலையினையும் சுற்றிப் பார்வையிட்டுள்ளார். இங்கு அமைந்துள்ள குறைந்த தரத்திலான விஞ்ஞான ஆய்வுகூடத்தை புனரமைத்து நவீன முறைப்படி மாற்றியமைக்க உதவுவதாக பாடசாலை நிர்வாகத்திற்கும், மாணவர்களிற்கும் உறுதியளித்துள்ளார். காரை மத்தி முதியோர் இல்லத்திற்கும் சென்றிருந்த திருமதி.விஜயகலா அங்கு தங்கியிருக்கும் முதியோர்களுடன் கலந்துரையாடியதுடன் இவ்வில்லத்தின் பொறுப்பாளரிடம் ஒருதொகைப் பணத்தையும் வழங்கியுதவினார். வடபிராந்திய போக்குவரத்துச் சபையின் காரைநகர் சாலை அலுவலகத்திற்கு விஜயம் செய்த பாராளுமன்ற உறுப்பினர் குறைபாடுகளை கேட்டறிந்ததுடன் அலுவலகப் பாவனைக்கு புதிய கணினி ஒன்றினையும் கொடுத்து உதவினார். அலுவலக உத்தியோகத்தர்கள் தெரிவித்திருந்த குறைபாடுகளை போக்குவரத்து அமைச்சருடன் தொடர்பு கொண்டு நீக்க நடவடிக்கை எடுப்பதாகவும் தெரிவித்தார்.

## இலங்கை செஞ்சிலுவைச் சங்க காரைநகர் கிளை நடாத்திய தொண்டர்கள் கௌரவிப்பு விழா

இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்தின் காரைநகர் கிளையின் தலைவர் திரு.சோ.விக்கினேஸ்வரன் தலைமையில் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயத்தில் 16.02.2011இல் நடைபெற்ற தொண்டர்கள் கௌரவிப்பு விழாவின்போது காரைநகரைச் சேர்ந்த பல தொண்டர்கள் கௌரவிக்கப்பட்டு அவர்களது சேவைகள் பாராட்டப்பட்டிருந்தன. யாழ்நகரின் பிரபல வர்த்தகரும், காரை அபிவிருத்திச் சபையின் முன்னணி நிர்வாக உறுப்பினரும், பல்வேறு சமூகப்பணிகளிற்கு தாராள சிந்தையுடன் உதவி வரும் சமூகப்பற்றாளருமான ஈ.எஸ் பி நாகரத்தினம் அவர்களிற்கு மனிதநேய ஈகையாளன் என்ற பட்டம் இக்கௌரவிப்பு விழாவில் வைத்து வழங்கிக் கௌரவித்தமை விழாவின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாக அமைந்திருந்தது. இக்கௌரவிப்பு விழாவின் பிரதம விருந்தினராக செஞ்சிலுவைச் சங்கத்தின் யாழ் கிளைத்தலைவர் பேராசிரியர் ஏ.மு.கணேசலிங்கம் அவர்களும், சிறப்பு விருந்தினராக யாழ் பல்கலைக்கழக புவியியற் துறைப் பேராசிரியர் திரு.கா.குகபாலன், உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் செஞ்சிலுவைச் சங்க யாழ் கிளைச் செயலாளர் திரு.கு.பாலதுஷ்யன் ஆகியோரும் கௌரவ விருந்தினர்களாக கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசா,இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்தின் நிறைவேற்று உதவியாளர் திரு.ச.குகராஜன் அவர்களும் கலந்து கொணடனர்.

செஞ்சிலுவைச்சங்கத்தின் அங்கத்தவராக இருந்து சிறந்த சேவையாற்றிய களபூமியைச் சேர்ந்தவரும் பிரபல வர்த்தகருமாகவிருந்து அண்மையில் அமரத்துவமடைந்த அமரர் மு.ஏ.குணரத்தினம் அவர்களை நினைவுகூர்ந்து இவ்விழாவில் அன்னாரது உருவப்படத்திற்கு சுடரேற்றி அஞ்சலி செலுத்தப்பட்டது.

## யாழ் போதனா வைத்தியசாலை அபிவிருத்திக்கு நிதியுதவி: லண்டன்-காரை நலன்புரிச் சங்கத்தின் மனிதநேயப் பணி

யாழ். போதனா வைத்தியசாலையின் இருதய சிகிச்சைப் பிரிவின் அபிவிருத்திக்காக லண்டன்-காரை நலன்புரிச் சங்கம் ஐந்தரை இலட்சம்ரூபாயினை காரை அபிவிருத்திச் சபையூடாக வழங்கியுதவியுள்ளது. உதவிப்பணத்தின் பெறுமதிக்கான காசோலையை காரை அபிவிருத்திச் சபைத் தலைவர் திரு.க.சோமசேகரம், செயலாளர் திரு.க.ஜெயராசா, பொருளாளர் திரு.சற்குணராசா மற்றும் நிர்வாக உறுப்பினர் திரு.ஈ.எஸ்.பி.நாகரத்தினம் ஆகியோர் வைத்தியசாலைப் பணிப்பாளரின் காரியாலயத்தில் வைத்து பணிப்பாளர் டாக்டர்.பவானி அவர்களிடம் கையளித்திருந்தனர். இக்கையளிப்பு நிகழ்வின்போது டாக்டர்.லக்ஷ்மன், டாக்டர்.குருபரன், மற்றும் வைத்தியசாலைச் செயலாளர் திரு.பிரசாத் ஆகியோர் சமூகமளித்திருந்தனர். காசோலையைப் பெற்றுக்கொண்ட பணிப்பாளர் வைத்தியசாலை நிர்வாகத்தின் சார்பில் லண்டன்-காரை நலன்புரிச் சங்கத்தின் மனிதநேயப் பணியை பாராட்டி நன்றியைத் தெரிவித்துக்கொண்டதுடன் காரைநகரில் மேற்கொள்ளப்பட்டுவரும் நடமாடும் வைத்திய சேவைக்கு வைத்திய நிபுணர்களின் பங்களிப்பினை வழங்கியுதவுவதாக உறுதியளித்தார்.

## வறிய சிறுமியின் சத்திர சிகிச்சைக்கு நிதியுதவி: காரை அபிவிருத்திச் சபையின் கருணைப் பணி

காரைநகர் தோப்புக்காட்டைச் சேர்ந்த வறுமைப்பட்ட குடும்பம் ஒன்றினைச் சேர்ந்த சிறுமியான மெஞ்ஞானபூபதி கயல்விழி என்பவருக்கு இருதய சத்திர சிகிச்சை ஒன்றை மேற்கொள்ள ஒன்றேமுக்கால் இலட்சம் ரூபா தேவைப்பட்ட நிலையில் ஜனாதிபதி நிதியிலிருந்து ஒன்றரை இலட்சம ரூபா வழங்கப்பட்டிருந்தது. சிறுமியின் சத்திரசிகிச்சையை மேற்கொள்ள மிகுதியாகத் தேவைப்பட்ட இருபத்தையாயிரம் ரூபாபயினையும் உதவ வேண்டியதன் அவசியம் குறித்து காரை அபிவிருத்திச் சபைக்கு உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் தெரியப்படுத்தி பரிந்துரை செய்திருந்தார்.இதனை ஏற்றுக்கொண்ட சபை நிர்வாகம் இவ் உதவித் தொகையினை உடன் வழங்கத் தீர்மானித்ததுடன் இத்தொகைக்குரிய காசோலையினை சிறுமியின் பெற்றோரிடம் தலைவர் திரு.க.சோமசேகரம் கையளித்தார்.



## துறைமுகம் சித்திரகூடம் சித்திவிநாயகர் ஆலயம் புனர்நிர்மாணம் செய்யப்படுகிறது

வரலாற்றுப் பழமை மிக்க ஆலயமாக விளங்குகின்ற துறைமுகம் சித்திரகூடம் சித்தி விநாயகர் ஆலயம் பாலஸ்தாபனம் செய்யப்பட்டு பெரிய அளவிலான புனரமைப்புப் பணிகள் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சென்ற 6.03.2011இல் மூலஸ்தான வாசல்களில் அமையவுள்ள திருக்கதவுகளிற்கான நிலைகளை நிறுத்தும் நிகழ்வு விசேட பூசை வழிபாடுகளுடன் இடம்பெற்றிருந்தது.

## தேசிய சேமிப்பு வங்கியின் தன்னியக்க பணப்பரிமாற்று இயந்திரத்தின் சேவை ஆரம்பித்து வைக்கப்பட்டது

காரைநகர் பிரதான வீதியில் சக்கலாவோடைக்கு அண்மையாகவுள்ள தேசிய சேமிப்பு வங்கிக் கட்டிடத்தில் தன்னியக்க பணப்பரிமாற்று இயந்திரம் ஒன்று அமைக்கப்பட்டு வாடிக்கையாளரின் பாவனைக்கு விடப்பட்டுள்ளது. இப்பணப்பரிமாற்று இயந்திரத்தின் சேவையினை சம்பிரதாயபூர்வமாக ஆரம்பித்து வைக்கின்ற நிகழ்வு வங்கி முகாமையாளர் திரு.அ.கங்காதரன் தலைமையில் நடைபெற்றபோது பிரதம விருந்தினராக வருகைதந்திருந்த உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் நாடாவினை வெட்டி சேவையினை ஆரம்பித்து வைத்தார். முன்னதாக சங்கானை தேசிய சேமிப்பு வங்கி முகாமையாளர் திரு.மனோராஜ், காரைநகர் இலங்கை வங்கி முகாமையாளர் திரு.இ.சிவகுமாரன், கலாநிதி.ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசா, ஓய்வுபெற்ற அதிபர் திரு.நாகரத்தினம் ஆகியோர் இணைந்து மங்கள விளக்கேற்றி திறப்புவிழா வைபவத்தினை ஆரம்பித்து வைத்திருந்தனர்.

## கசூரினா கடற்கரைக்கு அண்மையில் மீன் சந்தை சமுர்த்தி அதிகாரசபையினால் நிர்மாணிப்பு

காரைநகர் சிவகௌரி கடற்தொழிலாளர் சங்கத்தின் உபயோகத்திற்கு மூன்று இலட்சம்ரூபா மதிப்பீட்டில் மீன் சந்தைக்கான கட்டிடம் ஒன்று கசூரினா கடற்கரைக்கு சமீபமாக நிர்மாணிக்கப்பட்டு வருகிறது. இலங்கை சமுர்த்தி அதிகார சபையின் நிதி ஒதுக்கீட்டில் நிர்மாணிக்கப்பட்டு வரும் இக்கட்டிட மதிப்பீட்டின் இருபத்தைந்து வீதமான பகுதி மீனவர்களினால் சிரமதான அடிப்படையில் செய்யப்பட்டுள்ளது என்பதுடன் தற்போது இக்கட்டிட நிர்மாணம் பூர்த்தியடையும் நிலையிலுள்ளது.

## இரு முன்னணி விளையாட்டுக் கழகங்களிற்கு விளையாட்டு உபகரணங்கள் வழங்கப்பட்டுள்ளன

கடந்த பல வருடங்களாக காரைநகரின் விளையாட்டுத்துறை வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றி வருகின்ற கோவளம் விளையாட்டுக் கழகம், கலாநிதி விளையாட்டுக் கழகம் ஆகியனவற்றிற்கு பல்லாயிரம் ரூபா பெறுமதிமிக்க விளையாட்டு உபகரணங்கள் வழங்கப்பட்டு ஊக்குவிக்கப்பட்டுள்ளன. பாராளுமன்ற உறுப்பினர் திருமதி.விஜயகலா மகேஸ்வரன் அவர்களினால் பன்முகப்படுத்தப்பட்ட வரவு-செலவுத் திட்டத்திலிருந்து ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்து கொள்முதல் செய்யப்பட்ட இவ்வுபகரணங்களை பாராளுமன்ற உறுப்பினர் கழகங்களின் நிர்வாகிகளிடம் நேரடியாகக் கையளித்திருந்தார். இக்கையளிப்பு நிகழ்வின்போது உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன், ஓய்வுபெற்ற இ.போ.ச.சாலை முகாமையாளர் திரு.கந்தசாமி மற்றும் செயலக உத்தியோகத்தர்கள் உட்பட பல விளையாட்டு ஆர்வலர்கள் கலந்து ஊக்கிவித்தனர்.

## உயர்பாதுகாப்பு வலயத்திற்குள் அகப்பட்டிருந்த மக்கள் குடியிருப்புப் பகுதிகள் விடுவிக்கப்பட்டுள்ளன.

நீண்டகாலமாக உயர் பாதுகாப்பு வலயத்திற்குள் உட்பட்டிருந்த காரைநகர் தெற்கு, காரைநகர் தென்மேற்கு ஆகிய கிராம சேவையாளர் பிரிவுகளுக்குள் வருகின்ற தோப்புக்காடு, மடத்துவளவு, பலகாடு ஆகிய பகுதிகள் தற்போது விடுவிக்கப்பட்டுள்ளதுடன் மக்கள் மீளக் குடியேறமுடியும் எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது. பல குடியிருப்புக்கள் அமைந்திருந்த இப்பகுதிகள் யாவும் மிதிவெடிகள் அபாயம் அற்ற பிரதேசம் என பாதுகாப்புத்தரப்பால் அத்தாட்சிப்படுத்தப்பட்டுள்ளதுடன் இப்பகுதிகளில் மீளக்குடியேற விரும்புவோர் சம்பந்தப்பட்ட கிராம சேவையாளருடாக உ.அ.அதிபர் காரியாலயத்துடன் தொடர்பு கொள்ளுமாறு கேட்கப்பட்டுள்ளனர். வட்டுக்கோட்டை,சுழிபுரம் ஆகிய பகுதிகளிலும் சங்கானை நலன்புரி நிலையத்திலும் தற்காலிகமாக வசிக்கும் நாற்பத்துஇரண்டு குடும்பங்கள் இப்பிரதேசங்களில் மீளக்குடியமர தயாராகி வருவதாக தெரிவிக்கப்படுகிறது.

## இசைக்கலாபாரதி சத்தியசொரூபி தீபனின் வயலின்-சோலோ இசைக் கச்சேரி

கனடாவில் வளர்ந்து வருகின்ற காரைநகரைச் சேர்ந்த இளம் வயலின் இசைக் கலைஞர் இசைக்கலாபாரதி திருமதி.சத்தியசொரூபி தீபனின் வயலின்-சோலோ கச்சேரி ஆகஸ்டு 5[th] திகதி மாலை 6மணிக்கு Donmills & Sheppard சந்திக்கு அருகாமையிலுள்ள Fairview Library அரங்கில் நடைபெறவுள்ளது. இசைத்திறமையை வளர்த்துக்கொண்டு உன்னத கலைஞராக மிளிரவேண்டும் என்கின்ற இலட்சிய நோக்குடன் ரசிகர்களின் ஆதரவையும், ஆசியையும் வேண்டி வருடாந்தம் ஏற்பாடு செய்யப்பட்டுவரும் இவரது கச்சேரி வரிசையின் மூன்றாவது நிகழ்வாக இது அமைகின்றது. இவருக்கு பக்கவாத்தியங்களாக தவில் சுடரொளி ஏ.மனோகரன் தவிலும் மிருதங்க இளவல் செந்தூரன் தர்மராஜா மிருதங்கமும் வாசிக்கவுள்ளனர்.மிருதங்க இளவல் செந்தூரன் தர்மராஜாவும் ஐக்கிய அமெரிக்காவில் வதியும் காரைநகரைச் சேர்ந்த இளம் கலைஞர் என்பது குறிப்பிடத்தக்கது. காரைநகர் மக்களும் இசை ஆர்வலர்களும் இவ்விசை நிகழ்வில் திரளாக கலந்து கொண்டு இவ்விளம் கலைஞர்களை ஊக்குவித்து ஆதரவளிக்க வேண்டும் என்பது காரை ஒளியின் எதிர்பார்ப்பாகும்.



## அபிவிருத்திச் சங்கங்கள் அமைத்து சுயதொழில் கடன் வழங்கி சேவையாற்றும் இலங்கை வங்கி

வசதி குறைந்த மக்கள் வாழும் பகுதிகளில் அபிவிருத்திச் சங்கங்களை அமைத்து வரும் காரைநகர் இலங்ககை வங்கிக் கிளையானது இச்சங்கங்கள் ஊடாக வறிய மக்களின் வாழ்வை மேம்படுத்தும் நோக்குடன் சுயதொழில் ஆரம்பிப்பதற்கான கடன்களை வழங்கி உதவி வருகின்றது. அந்த வகையில் கோவளம் பகுதியில் திரு.மு.சோமசுந்தரக்குருக்கள் தலைமையில் அபிவிருத்திச் சங்கம் ஒன்று அண்மையில் அங்குரார்ப்பணம் செய்துவைக்கப்பட்டுள்ளதுடன் இப்பகுதியிலுள்ள வசதி குறைந்த குடும்ப அங்கத்தவர்களிற்கு சுயதொழில் ஊக்குவிப்புக் கடன்களும் வழங்கப்பட்டுள்ளன. அங்குரார்ப்பண நிகழ்விலும்.கடன் வழங்கும் நிகழ்விலும் பிரதம விருந்தினராக உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலனும், சிறப்பு விருந்தினர்களாக இலங்கை வங்கியின் வடமாகாண உதவி பொது முகாமையாளர் கே.இ.வி.சுமணசிறி அவர்களும்.காரைநகர் கிளையின் முகாமையாளர் திரு.இ.சிவகுமாரன் அவர்களும் கௌரவ விருந்தினராக இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்தின் காரைநகர் கிளைத் தலைவர் திரு.சோ.விக்கினேஸ்வரனும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

## பல்வேறுஅமைப்புக்களின் களைகட்டிய விளையாட்டுவிழாக்கள்: விளையாட்டு ஆர்வலர்கள் மத்தியில் கரைபுரண்டோடிய உற்சாகம்

பாடசாலைகள். முன்பள்ளிகள். விளையாட்டு அமைச்சு. சமுர்த்தி அமைப்பு. கோட்டக்கல்வி நிர்வாகம். ஆகியனவற்றினால் அண்மைக்காலங்களில் தொடர்ச்சியாக அடுத்தடுத்து நடாத்தப்பட்டுவந்த விளையாட்டு விழாக்களால் விளையாட்டு ஆர்வலர்கள் மத்தியில் உற்சாகம் கரைபுரண்டோடியது. விறுவிறுப்பான பலதரப்பட்ட விளையாட்டுக்களை ரசிகர்கள் ஆர்வம் மேலிட கண்டுகளித்ததுடன் போட்டியாளர்களை ஆரவாரம் செய்து உற்சாகப்படுத்தினர். போட்டிகளில் வெற்றிபெற்ற வீரர்களும் வீராங்கனைகளும் விளையாட்டு அணிகளும் விழையாட்டுக் கழகங்களும் வெற்றிக்களிப்பில் ஆரவாரித்து மகிழ்ந்தன.

## சமுர்த்தி வங்கி சங்கம் நடாத்திய புத்தாண்டு விழாவும் விளையாட்டுப் போட்டிகளும்: பார்வையாளர்களை கவர்ந்து களிப்பூட்டிய பாரம்பரிய விளையாட்டுக்கள்



காரைநகர் பிரதேச சமுர்த்தி வங்கி சங்கத்தின் ஏற்பாட்டில் புத்தாண்டு தின விழாவும், விளையாட்டுப் போட்டிகளும் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய மைதானத்தில் 23.04.2011இல் சமுர்த்தி வங்கி முகாமையாளர் திரு.தி.சசிக்குமார் தலைமையில் கோலாகலமாக நடைபெற்றது. வசதி குறைந்த மக்களின் உளநல விருத்தியை நோக்காகக் கொண்டு அவர்கள் பங்குபற்றக்கூடிய வகையில் முற்றிலும் தமிழரின் பாரம்பரிய விளையாட்டுக்கள் இடம்பெற்றிருந்த இவ்விளையாட்டு விழாவில் பிரதம விருந்தினராக யாழ் மாவட்ட சமுர்த்தி இணைப்பாளர் திரு.அ.இரகுநாதன் அவர்களும் கௌரவ விருந்தினராக காரை அபிவிருத்திச் சபைத் தலைவர் திரு.க.சோமசேகரம் அவர்களும் சிறப்பு விருந்தினர்களாக கலாநிதி ஆ.தியாகராஜா.ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசா, யாழ்ற்ரன் கல்லூரி அதிபர் திரு.க.சோமசேகரம், உ.அ.அ.பணிமனை ஆளணி உதவியாளர் திருமதி.அ.உதயகுமார் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

பார்வையாளர்களைக் கவர்ந்து களிப்பூட்டக்கூடிய தமிழரின் பாரம்பரிய விளையாட்டுக்களான சறுக்குமரம் ஏறுதல், தலையணைச் சண்டை, கிடுகு பின்னுதல், தேங்காய் திருவுதல், போன்றனவற்றில போட்டிகள் இடம்பெற்றபோது ஆர்வத்துடன் பங்குபற்றிய போட்டியாளர்களை காரைநகரின் அனைத்துப் பகுதியிலிருந்தும் மைதானத்தின் பார்வையாளர் அரங்கில் திரண்டிருந்த மக்கள் பெருத்த ஆரவாரம் செய்து மகிழ்ந்து உற்சாகப்படுத்தி ஊக்குவித்த காட்சி ரசனைக்குரியதாக அமைந்திருந்தது.

## சுந்தரமூர்த்தி நாயனார் வித்தியாசாலை

இவ்வித்தியாசாலையின் வருடாந்த விளையாட்டு விழா அதிபர் திரு.சு.கணேசமூர்த்தி தலைமையில் 28.02.2011இல் நடைபெற்றபோது பிரதம விருந்தினராக காரைநகர் வைத்தியசாலை வைத்திய அதிகாரி டாக்டர்.சு.சுவாமிநாதன் அவர்களும் சிறப்பு விருந்தினர்களாக இப்பாடசாலையில் கடமையாற்றி ஓய்வு பெற்ற அதிபர் திருமதி.ச.இரங்கநாதன் அவர்களும், காரை அபிவிருத்திச் சபையின் பொருளாளர் லயன் திரு.த.சற்குணராசா(சீமாட்டி)அவர்களும் தேவஸ்தான பிரதமகுரு சிவஸ்ரீ.சண்முகராஜக் குருக்கள் அவர்களும் கலந்து சிறப்பித்தனர்.

## கோட்டக் கல்வி அலுவலக ஆதரவில் நடந்த விளையாட்டு விழா-காரைநகரின் அனைத்துப் பாடசாலைகளும் பங்குகொண்டன

காரைநகர் தனியான கல்விக் கோட்டமாக உருவாக்கப்பட்ட பின்னர் இக்கல்விக் கோட்டத்திற்கு உட்பட்ட பாடசாலைகளுக்கிடையேயான விளையாட்டுப் போட்டிகள் கோட்டக் கல்வி அலுவலகத்தினால் ஒழுங்கமைக்கப்பட்டு அண்மையில் நடாத்தப்பட்டிருந்தன. கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய மைதானத்தில் காரைநகர் கோட்டக் கல்விப் பணிப்பாளர் திரு.ஸ்ரீவிக்கினேஸ்வரன் தலைமையில் நடைபெற்ற இவ்விளையாட்டு விழா காரைநகரிலுள்ள இரண்டு உயர்தரப் பாடசாலைகள், இரண்டு இடைநிலைப் பாடசாலைகள் மற்றும் ஆரம்ப பாடசாலைகள் என அனைத்துப் பாடசாலைகளும் பங்கு பற்றிய மிகப்பெரிய விழாவாக அமைந்திருந்தது. புள்ளிகள் அடிப்படையில் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயம் முதலாம் இடத்தையும் யாழ்ற்ரன் கல்லூரி இரண்டாம் இடத்தையும், சுந்தரமூர்த்தி நாயனார் வித்தியாலயம் மூன்றாம் இடத்தையும், வியாவில் சைவ வித்தியாலயம் நான்காம் இடத்தையும் பெற்றுக் கொண்டன.

உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் பிரதம விருந்தினராகவும் யாழ்ற்ரன் கல்லூரியின் முன்னாள் அதிபர் திரு.ந.பரமசிவம் சிறப்பு விருந்தினராகவும் அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டிருந்தனர்.

### மெய்கண்டான் வித்தியாலயம்

12.02.2011இல் நடாத்தப்பட்டிருந்த இப்பாடசாலையின் வருடாந்த விளையாட்டு விழா வித்தியாலய அதிபர் திருமதி. புஷ்பராணி தங்கராசா தலைமையில் நடைபெற்றிருந்தபோது பிரதம விருந்தினராக காரைநகர் கோட்டக்கல்விப் பணிப்பாளர் திரு.ஸ்ரீவிக்கினேஸ்வரனும் அவரது பாரியாரும், சிறப்பு விருந்தினர்களாக கலாநிதி.ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசா,யாழ்ற்ரன் கல்லூரி அதிபர் திரு.சோமசேகரம் ஆகியோரும், கௌரவ விருந்தினர்களாக காரைநகர் கோட்டக்கல்வி அலுவலக உத்தியோகத்தர் திரு.சி.பிரபாகரன் அவர்களும் காரைநகர் வடக்கு கிராமசேவையாளர் திரு.ஐ.மு.நடேசன் அவர்களும் சமூகமளித்து சிறப்பித்திருந்தனர்.

### திக்கரை திருச்செந்தூரன் முன்பள்ளி

இம்முன்பள்ளியின் வருடாந்த விளையாட்டு விழா 18.03.2011 இல் பெற்றோர் ஆசிரியர் சங்கத் தலைவி திருமதி.து.ரஜிதா தலைமையில் இடம்பெற்றது. இவ்விளையாட்டு விழாவின் பிரதம விருந்தினராக காரைநகர் சமுர்த்தி வங்கி முகாமையாளர் திரு.தி.சசிகுமாரும் சிறப்பு விருந்தினர்களாக ஓய்வுபெற்ற அதிபர் திருமதி.இரங்கநாதன் முருகமூர்த்தி ஆலய பிரதம குரு சிவஸ்ரீ. பவானந்தசர்மா, காரைநகர் கிழக்கு கிராம சேவையாளர் திருமதி.தி.பாலாம்பிகை ஆகியோரும் கௌரவ விருந்தினர்களாக காரைநகர் கிழக்கு சமுர்த்தி உத்தியோகத்தர் திரு.கெங்காதரன், முன்பள்ளிகளின் இணைப்பாளர் செல்வி.அ.புஷ்பராணி ஆகியோரும் அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டிருந்தனர்.

### கலாநிதி. ஆ. தியாகராஜா மத்திய மகா வித்தியாலய கனிஷ்டபிரிவு.

இப்பாடசாலையின் வருடாந்த விளையாட்டு விழா வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசா தலைமையில் 19.02.2011இல் நடைபெற்றிருந்தது. காரைநகர் வட-கிழக்கு கிராம சேவையாளர் திரு.இ.திருப்புகழூர்சிங்கம் பிரதம விருந்தினராகவும், யாழ்ப்பாணம் சரவணா ரெக்ஸ் அதிபர் திரு.க.விமலதாசன் சிறப்பு விருந்தினராகவும் அழைக்கப்பட்டு கலந்துகொண்டனர்.

### தோப்புக்காடு மறைஞான சம்பந்தர் வித்தியாசாலை

இடம்பெயர்வின் பின்னர் அண்மையிலேயே மீள ஆரம்பிக்கப்பட்டிருந்த இப்பாடசாலையின் விளையாட்டு விழா அதிபர் திருமதி.மங்களேஸ்வரி தேவராஜா தலைமையில் 22.03.2011இல் நடைபெற்றது. பிரதம விருந்தினராக உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் அவர்களும், சிறப்பு விருந்தினர்களாக காரைநகர் கோட்டக் கல்விப் பணிப்பாளர் திரு.பொ.ஸ்ரீவிக்கினேஸ்வரன், ஓய்வு பெற்ற அதிபரும் சமய, சமூக சேவையாளருமாகிய திரு.க.தில்லையம்பலம் ஆகியோரும் கௌரவ விருந்தினர்களாக தோப்புக்காடு கி.அ.சங்க தலைவரும், காரை அபிவிருத்திச் சபை நிர்வாக உறுப்பினருமான திரு.இ.ஜெயராமன், காரைநகர் தெற்கு கிராம சேவையாளர் திருமதி.பா.நீலகண்டன், தோப்புக்காடு ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி தேவஸ்தான பிரதமகுரு சிவஸ்ரீ.கு.சரவணபவானந்த சர்மா ஆகியோரும் கலந்து சிறப்பித்தனர்.

### கலாநிதி.ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயம்

இப்பாடசாலையின் வருடாந்த விளையாட்டுவிழா அதிபர் திரு.பொன் சிவானந்தராசா தலைமையில் வித்தியாலய மைதானத்தில் 05.03.2011இல் நடைபெற்றிருந்தது. இந்நிகழ்வின் பிரதம விருந்தினராக பாடசாலையின் பழைய மாணவனும் வடமாகாண விலங்கியல் உற்பத்தித் திணைக்களப் பணிப்பாளருமான சயம்புவீதியைச் சேர்ந்த டாக்டர் சேனாதிராசா சிவநாதனும் அவரது பாரியாரான வவுனியா வைத்தியசாலையின் சிரேஷ்ட வைத்திய அதிகாரி டாக்டர்.விக்கினேஸ்வரி அவர்களும், சிறப்பு விருந்தினராக காரைநகரைச் சேர்ந்த பிரபல வர்த்தகர் திரு.நேசேந்திரன் அவர்களும் கலந்துகொண்டனர். வழமையான நிகழ்ச்சிகளுடன் போட்டிகளின் இடையே விசேட பயிற்சிபெற்ற மாணவர்களினால் நிகழ்த்தப்பட்டிருந்த மயிர்க்கூச்செறியும் சாகசங்கள் நிறைந்த ஜிம்னாஸ்ரிக் கண்காட்சி பார்வையாளர்களை வியக்கவைத்தது. இவ்விளையாட்டுவிழாவின் ஓர் அங்கமாக இரு பாலாரும் பங்குகொண்ட மரதன் ஓட்டம் சைக்கிள் ஓட்டம் ஆகியபோட்டிகள் பிரதான சுற்றுவீதியூடாக இடம்பெற்றிருந்தன.



## பெரியமணல் சிவகௌரி முன்பள்ளி

சித்திரை புதுவருடத்தை முன்னிட்டு இவ் முன்பள்ளியின் விளையாட்டு விழா சிவகௌரி சனசமூக நிலைய முன்றலில் வெகு சிறப்பாக நடாத்தப்பட்டிருந்தது. இந்நிகழ்வின் பிரதம விருந்தினராக காரைநகர் கோட்டக் கல்விப் பணிப்பாளர் திரு.ஸ்ரீவிக்கினேஸ்வரன் அவர்களும் சிறப்பு விருந்தினராக கலாநிதி ஆ.தியாகராசா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசாவும் கலந்து கொண்டனர்.

## விளையாட்டு அமைச்சின் ஆதரவில் வருடாந்த விளையாட்டு விழா கலாநிதி விளையாட்டுக் கழகம் வெற்றிக்கேடயத்தை கைப்பற்றியது

விளையாட்டு அமைச்சின் ஆதரவில் காரைநகர் உ.அ.அதிபர் பிரிவிலுள்ள பதிவுசெய்யப்பட்ட விளையாட்டுக் கழகங்களுக்கிடையே தழுநிலையிலான விளையாட்டுப் போட்டிகள் பல நாட்களாக நடைபெற்றதைத் தொடர்ந்து தடகள நிகழ்ச்சிகள் 09.04.2011இல் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியால்ய மைதானத்தில் உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் தலைமையில் விறுவிறுப்பாக நடைபெற்றிருந்தன. இவ்விளையாட்டு விழாவின் பிரதம விருந்தினராக யாழ் மாவட்ட அரசாங்க அதிபர் திருமதி.இமெல்டா சுகுமார் அவர்களும் சிறப்பு விருந்தினர்களாக விளையாட்டுத்துறை யாழ் மாவட்ட அதிகாரி திருமதி. ரொஹான் ரூபசிங்க, பிரபல வர்த்தகர் "கல்விக் காருண்யன்" திரு.ஏ.எஸ்.பி.நாகரத்தினம், கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன் சிவானந்தராசா ஆகியோரும் கலந்து சிறப்பித்திருந்தனர். பங்குபற்றிய பத்து விளையாட்டுக் கழகங்களுள் கலாநிதி விளையாட்டுக் கழகம் முதலிடத்தைப் பெற்று வெற்றிக் கேடயத்தைக் கைப்பற்றிக்கொண்டது.

## வியாவில் ஐயனார் ஆலய தேர் தரிப்பிடத்தின் திருப்பணிக்கு கனடா வாழ் காரை அன்பர் நிதியுதவி

காரைநகர் வியாவில் ஐயனார் ஆலயத்தில் புதிதாக நிர்மாணிக்கப்பட்ட தேர்முட்டியுடன் இணைந்த தேர் தரிப்பிடத்தின் தேர் [illegible]ன்று வெளிவருகின்ற இருபக்க வாசல்களையும் மறைத்து தேர் பழுதடையாவண்ணம் பாதுகாக்க உதவும் இரும்பு, தகரம் ஆகியவற்றினாலான இரு பிரமாண்டமான படல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றினை அமைப்பதற்காகச் செலவிடப்பட்ட நான்கரை [illegible] ரூபாயினை கனடாவில் வசிக்கும் கருங்காலியைச் சேர்ந்த திரு. லிங்கராஜன் என்பவர் அவரது தந்தையாரான அமரர் நாகலிங்கம் ஞாபகார்த்தமாக வழங்கி இத்திருப்பணி நிறைவேற உதவியுள்ளார்.

## 5ம் தர புலமைப்பரிசில் பரீட்சை மாணவர்களிற்கு விசேட பயிற்சி வகுப்புக்கள்: அனுசரணை வழங்கிய கனடா-காரை கலாச்சார மன்றத்திற்கு கல்விப் பணிப்பாளர் விக்கினேஸ்வரன் பாராட்டு

காரைநகர் கோட்டக் கல்வி நிர்வாகத்திற்கு உட்பட்ட பாடசாலைகளில் பயிலும் ஐந்தாம் தர மாணவர்கள் புலமைப் பரிசில் [illegible]யில் தோற்றி சிறப்புச் சித்திகள் பெறக்கூடிய வகையில் தயார்படுத்தி விடுவதற்கான விசேட பயிற்சி வகுப்புக்கள் கோட்டக் கல்வி [illegible]வலகத்தின் ஏற்பாட்டில் சென்ற பெப்ரவரி மாதம் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயம், யாழற்ரன் கல்லூரி ஆகிய இரு [illegible]சாலைகளிலும் நடாத்தப்பட்டிருந்தன. கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய கனிஷ்ட பாடசாலை(சுப்பிரமணிய வித்தியாசாலை), [illegible]ற்ரன் கல்லூரி, வியாவில் சைவ வித்தியாலயம், மெய்கண்டான் வித்தியாலயம், ஊரி அ.மி.பாடசாலை, சுந்தரமூர்த்தி வித்தியாலயம், [illegible]ந்தலை வடக்கு அ.மி.பாடசாலை ஆகியனவற்றில் பயிலும் ஐந்தாம் தர மாணவர்களிற்கான இப்பிரத்தியேக பயிற்சி வகுப்புக்கள் விசேடமாகப் பயிற்றுவிக்கப்பட்ட ஆசிரியர்களினால் வழங்கப்பட்டன என்பதுடன் இப்பயிற்சி வகுப்புக்களை நடாத்துவதற்கு தேவைப்பட்ட எழுபதாயிரம் ரூபாவினை கனடா-காரை கலாச்சார மன்றம் உதவியிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

மாதிரி வினாத்தாள்கள் தயாரிக்கப்பட்டு, இம்மாணவர்களிடையே பரீட்சைகளும் நடாத்தப்பட்டு மதிப்பீடு செய்யப்பட்டதன்மூலம், அவர்கள் இறுதிப்பரீட்சைக்குத் தோற்றி இலகுவாக சிறப்புச் சித்திகள் பெறக்கூடியயவகையில் திறம்பட தயார்படுத்தப்பட்டிருந்தனர். இப்பயிற்சி குறித்து கருத்துத் தெரிவித்த வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் பயனுள்ள உண்மையான தேவையறிந்து அனுசரணை வழங்கிய கனடா-காரை கலாச்சார மன்றத்தின் பணி போற்றுதற்குரியது என்பதுடன் எதிர்காலத்திலும் இதுபோன்ற கல்விசார்ந்த செயற்பாடுகளை முன்னெடுக்க இம்மன்றம் உதவ வேண்டும் எனக் கேட்டுக்கொண்டதுடன் இப்பயிற்சி வகுப்புக்களை ஒழுங்கமைத்து நடாத்த ஒத்துழைத்த காரை அபிவிருத்திச் சபை நிர்வாகத்திற்கு பாராட்டையும் நன்றியையும் தெரிவித்துக் கொண்டுள்ளார்.

## "அறிவுலகம்" என்ற தொனிப்பொருளில் கண்காட்சி: யாழ் பல்கலைக்கழக நூலக விழிப்புணர்வு நிறுவனம் நடாத்தியது.

யாழ்ப்பாண பல்கலைக் கழகத்தின் நூலக விழிப்புணர்வு நிறுவனத்தின் ஏற்பாட்டில் "அறிவுலகம்"(பன்முகத் தகவல் அறிவு விருத்திகள் கண்காட்சி) என்ற தொனிப் பொருளிலான கண்காட்சி ஒன்று 15.02.2011 முதல் 25.02.2011 வரையான பதினொரு தினங்களிற்கு கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலய மண்டபத்தில் இடம்பெற்றது. இக்கண் காட்சியின் ஆரம்ப விழாவில் வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரன் பிரதம விருந்தினராகக் கலந்து கொண்டதுடன் நாடாவை வெட்டி கண்காட்சியை சம்பிரதாயபூர்வமாக ஆரம்பித்து வைத்தார். தீவக வலய கல்விப் பணிப்பாளர் திரு.இராதாகிருஸ்ணன் இவ்விழாவின் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். காரைநகரிலுள்ள அனைத்துப் பாடசாலை மாணவர்களும் பொதுமக்களும் பார்வையிட்டு பயன்படக்கூடிய வாய்ப்பு இக்கண்காட்சி மூலம் ஏற்படுத்தப்பட்டிருந்தது.

## கணவர் அமரர் தியாகராஜா மகேஸ்வரன் வழியில் திருமதி விஜயகலா பா.உ..: பல்வேறு அபிவிருத்திப் பணிகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.



அமரர் தியாகராச மகேஸ்வரன் காரைநகர் அபிவிருத்தியில் அக்கறையோடு செயற்பட்டு பல பணிகளை முன்னெடுத்து காரைநகர் மக்கள் மனதில் இடம்பிடித்துக்கொண்டவர். ஊரின் அபிவிருத்தி தொடர்பில் அவர் வழியில் பயணிக்கும் அவரது துணைவியார் திருமதி விஜயகலா மகேஸ்வரன் பா.உ காரைநகரின் பல பணிகளுக்கு உதவிவருகின்றார். பன்முகப்படுத்தப்பட்ட வரவு-செலவுத் திட்டத்திலிருந்து இவரால் ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்து தங்கோடை, கோவளம், வேதரடைப்பு, விளானை, திக்கரை, தோப்புக்காடு, வியாவில், கல்லந்தாழ்வு ஆகிய குறிச்சிகளிலுள்ள எட்டு கிராம அபிவிருத்திச் சங்கங்களிற்கு தளபாடங்களும், உபகரணங்களும் வழங்கப்பட்டுள்ளன. இதேவேளை முப்பத்தேழு தையல் இயந்திரங்கள் தங்கோடை கிராம அபிவிருத்திச் சங்கத்திற்கு வழங்கப்பட்டுள்ளதுடன் இவற்றினைப் பயன்படுத்தி தையற் பயிற்சி நிலையம் ஒன்றும் ஆரம்பித்து வைக்கப்பட்டுள்ளது. இத்தையற் பயிற்சி நிலையம் ஊடாக உற்பத்தி செய்யப்படும் ஆடைகளை ஏற்றுமதி செய்வதற்கான பரீட்சார்த்த முயற்சிகளும் எதிர்காலத்தில் மேற்கொள்ளப்படும் என தெரிவிக்கப்படுகிறது. திருமதி.வீஜயகலாவின் அழைப்பில் காரைநகருக்கு விஜயம் செய்திருந்த ஐ.தே.கட்சிப் பிரமுகர்களான அக்கட்சியின் பிரதித் தலைவர் திரு. கரு.ஜெயசூரியா, செயலாளர் திரு.திஸ்ஸ அத்தநாயக்க, பொருளாளர் திரு.டி.எம்.சுவாமிநாதன் மற்றும் பாராளுமன்ற உறுப்பினர் திரு. ஜெயலத் ஜெயவர்த்தனா ஆகியோர் கலந்துகொண்ட கூட்டமொன்றில் வைத்து கி.அ.சங்க நிர்வாகிகளிடம் தளபாடங்களும் உபகரணங்களும் கையளிக்கபட்டதுடன். தையற் பயிற்சியும் ஆரம்பித்து வைக்கப்பட்டது.மணற்காட்டு அம்மன் ஆலய வீதியில் அமைந்துள்ள மகேஸ்வரன் ஞாபகார்த்த தர்மசுரபி மண்டபத்தில் திரளான மக்கள் முன்னிலையில் இந்நிகழ்வுகள் இடம்பெற்றிருந்தன.

பன்முகப்படுத்தப்பட்ட வரவு-செலவுத் திட்டத்தின் கீழ் கடந்த ஆண்டு நீலங்காடு கடற்றொழிலாளர் சங்கம். ஊரிக் கிராம அபிவிருத்திச் சங்கம் ஆகியவற்றிற்கு பல இலட்சம் ரூபா பெறுமதியான மீன்பிடி உபகரணங்கள் வாங்குவதற்கும் கசூரினா கடற்கரையில் பொது மலசலகூடம் அமைப்பதற்கும் திருமதி விஜயகலாவால் நிதி வழங்கப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

## காரைநகரின் நுழைவாயிலில் அமைக்கப்படவுள்ள அலங்கார வளைவிற்கான அடிக்கல் நாட்டப்பட்டது.

மூன்றரை கிலோ மீற்றர் நீளமான பொன்னாலைப்பால வீதி முடிவுற்று காரைநகரின் எல்லை ஆரம்பிக்கும் இடமாகிய தொப்பிக்கட்டிற்கும் மண்றோட்டிற்கும் இடைப்பட்ட பகுதியில் அமைக்கப்படவுள்ள காரைநகர் வரவேற்கிறது என்ற வாசகம் பொறிக்கப்பட்ட அலங்கார வளைவிற்கான அடிக்கல் நாட்டும் வைபவம் சென்ற 4-4-2011இல் பாராளுமன்ற உறுப்பினர் திருமதி. விஜயகலா மகேஸ்வரன் தலைமையில் இடம்பெற்றது. இவ் அலங்கார வளைவினை அமைக்க வேண்டும் என விரும்பியிருந்த அமரர் மகேஸ்வரனின் கனவை நனவாக்கும் வகையில் அவரது துணைவியாரான திருமதி.விஜயகலாவின் நிதி ஒதுக்கீட்டின் உதவியுடன் நிர்மாணிக்கபடவிருக்கும் இவ் அலங்கார வளைவின் அடிக்கல்லிற்கான முதலாவது கல்லினை அமரர் மகேஸ்வரனின் உறவினர் திரு.வே.கந்தையா நாட்டியதைத் தொடர்ந்து உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன். காரை அபிவிருத்திச் சபைத் தலைவர் திரு.க.சோமசேகரம், கனடா-காரை கலாச்சார மன்றத்தின் உப-தலைவர் திரு.ப.தர்மலிங்கம், அமரர் மகேஸ்வரனின் செயலாளராகப் பணியாற்றிய திரு.ஐ.தி.சம்பந்தன், வட-கிழக்கு கிராம சேவையாளர் திரு.இ.திருப்புகழூர்சிங்கம் உடபட பலர் கற்களை நாட்டினர். சுமார் பதினைந்து இலட்சம் ரூபா மதிப்பீட்டில் கொங்கிறீற்றினால் அமையவுள்ள இவ் அலங்கார வளைவு கலையம்சங்கள் பொருந்தியிருப்பதுடன் காரைநகர் சிவபூமி என்பதை பிரதிபலிக்கும் வகையில் இரு கரைகளிலும் நந்தி சின்னங்களும். மையப்பகுதியில் நடேசர் உருவமும் அமைக்கப்படவுள்ளன.



## ஈழத்துச் சிதம்பரத்தில் ஆறுகாலப் பூசை

ஈழத்துச் சிதம்பர மகாகும்பாபிஷேகத்தை தொடர்ந்து இதுவரை நான்கு கால பூசை நடைபெற்றுவந்த இவ்வாலயத்தில் ஆறுகாலப் பூசை நடைபெற்றுவருகிறது. அத்துடன் உற்சவ காலங்களில் எழுந்தருளி சுவாமிகள் இரண்டாம் வீதி சுற்றும்போது வசந்தமண்டபத்தின் தெற்குப்புற வாசல்வழியாக வெளியேறி இரண்டாம் வீதியை அடைந்து வடக்குப்புறமாக அமைந்துள்ள வாசல் வழியாக உட்சென்று வசந்தமண்டபத்தை அடையும்முறை இனிமேல் பின்பற்றப்படவுள்ளது. மகாகும்பாபிஷேகத்தின்போது கும்பங்கள் வீதிவலம் வந்தபோது இம்முறையே பின்பற்றப்பட்டிருந்தது.

## முனைப்புடன் செயற்பட ஆரம்பித்துள்ள அடியார் சபை

ஈழத்து சிதம்பர அடியார் சபை மகாகும்பாபிஷேகத்தினை வெகுசிறப்பாக நடாத்தி முடித்துவிட்ட நிலையில் வேறும் பல முக்கிய பணிகளை முன்னெடுக்கவுள்ளதாக அறியப்படுகிறது. ஆலயத்தின் மூன்றாம் வீதி மழைகாலங்களில் வெள்ளம் தேங்கி சேறும் சகதியுமாக இருந்துவருவதை மாற்றியமைக்கும்வகையில் இவ்வீதி புனரமைக்கப்படவுள்ளதுடன் வீதியைச் சுற்றிவர சுற்று மதிலும் அமைக்கப்படவுள்ளதாக தெரிவிக்கப்படுகிறது. அடியார் சபையின் ஆலய வளர்ச்சிப் பணிகளிற்கு ஆலய நிர்வாகம் சிறப்பான ஒத்துழைப்பை வழங்கி வருகிறது.

## சிவாச்சிரமம் புனரமைக்கப்பட்டு மீண்டும் செயற்படவுள்ளது

உயர் நீதிமன்ற நீதியரசராகவிருந்த அமரர் நடராசாவின் பாரியார் அமரர் தங்கம்மா அவர்களினால் சிவன்கோவிலின் மூன்றாம் வீதியின் வடக்கே ஸ்தாபிக்கப்பெற்று ஆன்மீகப் பணியாற்றிவந்த சிவாச்சிரம கட்டிடம் அவரது மறைவிற்குப் பின்னர் செயலிழந்து பராமரிப்பற்ற நிலையில் பழுதடைந்து காட்சியளிக்கிறது. தற்போது இதனை நிர்வகிப்பதற்கு நம்பிக்கைப் பொறுப்பாளர்சபை ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளதைத் தொடர்ந்து இக்கட்டிடத்தினை புனரமைத்து மீண்டும் ஆன்மீகப் பணிகளில் ஈடுபடுவதற்கான முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இங்கு பண்ணிசை வகுப்புக்கள் நடாத்தப்படவுள்ளதோடு அந்தண மாணவர்கள் பயிலக்கூடிய வகையில் வேதாகம பாடசாலை ஒன்றும் ஏற்படுத்தப்படவுள்ளதாக அறியப்படுகிறது. இவ் ஆச்சிரமத்தை ஸ்தாபித்த அமரர் திருமதி.தங்கம்மா நடராசா அவர்கள் கலாநிதி ஆ.தியாகராஜா ம.ம.வித்தியாலயத்தில் அமைந்துள்ள நடராசா ஞாபகார்த்த மண்டபத்தினையும் கட்டி உதவியவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## நவீன பொது நூலகத்தின் கட்டுமாணப் பணி ஆரம்பித்து வைக்கப்பட்டுள்ளது.

புலம்பெயர்ந்த காரை மக்களின் கூடிய பங்களிப்புடன் அமைக்கப்படவுள்ள நவீன பொது நூலக கட்டிடத்திற்கான அடிக்கல் நாட்டும் வைபவம் சென்ற 04-06.2011இல் காரை அபிவிருத்திச் சபையின் ஏற்பாட்டில் அதன் தலைவர் திரு.க.சோமசேகரம் தலைமையில் [illegible] நடாத்தப்பட்டிருந்தது. உ.அ.அதிபர் திரு.இ.த.ஜெயசீலன் அவர்கள் அடிக்கல்லிற்கான முதற்கல்லினை [illegible]தைத் தொடர்ந்து வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரனும் காரைநகரின் பல பிரமுகர்களும், [illegible]களும் கற்களை நாட்டிவைத்து நூலகத்தின் கட்டிடப்பணிகளை சம்பிரதாயபூர்வமாக ஆரம்பித்துவைத்தனர். இப்பொது [illegible]ான முன்மொழிவினை முன்வைத்து அதற்கான ஆதரவு செயற்பாடுகளில ஈடுபட்டிருந்த முன்னாள் உதவி வைத்திய அதிகாரி திரு.நடராசாவும் இந்நிகழ்வில் கலந்துகொண்டிருந்தார்.

[illegible]து நூலகத் திட்டத்திற்கு உதவும் பொருட்டு கனடா-காரை கலாச்சார மன்றத்தினால் நன்கொடைகள் பெறப்பட்டு [illegible]வும் ஆர்வமும் அக்கறையுமுள்ள காரை மக்களின் உதவியினை தொடர்ந்தும் எதிர்பார்ப்பதாகவும் மன்றத்தின் தலைவர் [illegible] வி.ரவீந்திரன் தெரிவித்துள்ளார்.

## [illegible]ரச் சங்கமத்தில் கலப்பதற்கு லண்டன் சென்றுள்ள கல்விப் பணிப்பாளர் விக்கினேஸ்வரன்

லண்டன் காரை நலன்புரிச் சங்கம் எதிர்வரும் ஜுன் 25ம் திகதி வழங்கவுள்ள காரைச்சங்கமம் கலைவிழாவில் பிரதம [illegible]ந்தினராக கலந்துகொள்ளும் பொருட்டு வடமாகாணக் கல்விப்பணிப்பாளர் திரு.ப.விக்கினேஸ்வரனும் பாரியாரும் லண்டன் [illegible]ேறடைந்துள்ளனர். காரைநகரின் கல்வியை மேம்படுத்த ஊர்ப்பற்றோடு உழைத்து வருகின்ற திரு.விக்கினேஸ்வரனை லண்டனுக்கு [illegible]ழைத்து கௌரவித்ததன் மூலம் காரைமண்ணுக்கு உழைக்கும் இவர் போன்ற சேவையாளர்களை ஊக்குவிக்க வழிகோலிய லண்டன் [illegible]ரை நலன்புரிச்சங்கத்திற்கு காரை ஒளி நன்றி தெரிவிப்பதுடன் காரைச் சங்கமம் காரைமண்ணின் வாசனையோடு பொலிவுபெற்று விளங்கவும் வாழ்த்துகிறது.

## காரைநகர் வர்த்தகத்துறை சாதனையாளர்கள் வரிசையில் இணைந்துகொண்ட காசிப்பிள்ளை

வவுனியா நகரில் வர்த்தகத்துறையில் பிரபல்யம்பெற்று வவுனியா காசிப்பிள்ளை என காரைநகர் மக்களால் நன்கு அறியப்பட்ட ஆயிலியைச் சேர்ந்த திரு.முருகேசு காசிப்பிள்ளை அவர்கள் கடந்த இருபது வருடங்களாக Markham & Eglington சந்திப்புக்கருகில் காசிப்பிள்ளை சக புத்திரர்கள் என்கின்ற துரித பணமாற்றுச் சேவை நிறுவனத்தை தமது புத்திரர்களுடன் இணைந்து நடாத்தி வருகின்றார். இதனுடைய கிளை நிறுவனம் ஒன்று அண்மையில் Markham & Steels சந்திப்புக்கு அருகாமையில் திறந்து வைக்கப்பட்டுள்ளது. கனடாவில் தமிழ் மக்களுடைய நம்பிக்கையைப் பெற்று முன்னணியில் திகழும் பிரபல்யம்மிக்க துரித பணமாற்றுச் சேவை நிறுவனமாக இது விளங்குகின்றது. கடின உழைப்பும், மனவுறுதியும் நம்பிக்கையும் நேர்மையும் மிக்க திரு.காசிப்பிள்ளை அவர்கள் வர்த்தகத் துறையில் பொன்விழாக்கண்டு பூரித்து இன்று 52[ஆவது] ஆண்டில் பாதம் பதித்து காரைநகர் வர்த்தகத்துறை சாதனையாளர்கள் வரிசையில் இடம்பிடித்துள்ளார். கனடா-காரை கலாச்சார மன்றத்தின் தலைவராகவும், திட்டமிடல் போஷகர் சபை உறுப்பினராகவும் பதவி வகித்து மன்றத்திற்கு பெருமை சேர்த்ததுடன் மன்றத்தினை வளர்ச்சிப் பாதையில் இட்டுச் சென்றவர். இன்றுவரை மன்றத்தின் பணிகளிற்கு ஆதரவளித்துவரும் இவர் வேறும் பல சமூகப் பணிகளிற்கும் உதவி வருகின்றார். பொன்விழாக் கண்ட இவரை காரை ஒளி பாராட்டி வாழ்த்துவதில் மகிழ்ச்சியடைகின்றது.



## சுவிற்சலாந்தில் முத்தமிழும் சங்கமித்து காரைத் தென்றலாக வருடியது

சென்ற 29.05.2011இல் சுவிற்சலாந்தின் Zurich நகரில் சுவிஸ் வாழ் காரை மக்களை ஒன்றுகூட வைத்ததுடன் முத்தமிழின் சுவையையும் காரைத்தென்றல் என்கின்ற கலைவிழா மூலமாக அனுபவிக்க வைத்தனர் சுவிஸ் காரை அபிவிருத்திச் சபையினர். பிரபல ஊடகவியலாளர், சிறந்த வானொலிக் கலைஞர், ஆற்றல்மிகு பேச்சாளர், கற்பனை வளம்மிக்க கவிஞர் ஆகிய சிறப்புக்களுக்குரிய காரையின் மைந்தன் திரு.இளையதம்பி தயானந்தா பிரதம விருந்தினராக கலந்து கொண்டு காரைத்தென்றலை மேன்மையுறச் செய்திருந்தார். லண்டன்-காரை நலன்புரிச் சங்க தலைவர் திரு.தவராஜா, பிரான்ஸ் காரை நலன்புரிச் சங்க தலைவர் திரு. ஜெகநாதன், செயலாளர் திரு. தவபாலன் மற்றும் உறுப்பினர் திரு. நேருமாஸ்டர் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்புரைகள் வழங்கியிருந்தனர்.

சுவிஸ் நாட்டின் பல மாநிலங்களிலும் பரந்து வாழ்கின்ற காரையின் இளையோரையும், சிறியோரையும் ஒன்றிணைத்து சிறந்த பல சுவையான கலைநிகழ்வுகளை வழங்கவவைத்து ஊக்குவித்த சுவிஸ்-காரை அபிவிருத்திச் சபையின் பணி பாராட்டிற்குரியதாகும். திரு.இளையதம்பி தயானந்தா அவர்கள் வானொலி வாயிலாக நடாத்தியிருந்த நேர்காணல்கள் பலவற்றின் தொகுப்பாக வெளிவந்திருந்த "வானலைகளின் வரிகள்" என்கின்ற நூலின் அறிமுகவிழா "காரைத் தென்றலின்" சிறப்பம்சமாக இடம்பெற்றிருந்தது. ஓர் கலைவிழாவினிடையே பேச்சுக்கள் இடம்பெற்றால் அலுப்போடு நோக்குகின்ற கலா ரசிகர்களை இன்னும் பேசியிருக்கக்கூடாதா என எண்ணுமளவிற்கு நகைச்சுவை ததும்பிய திரு.தயானந்தாவின் மண்வாசனை கலந்த கவர்ச்சிமிகு உரை அமைந்து விழாவினை கலகலப்பாக்கி விட்டிருந்தது.

## துணிச்சலான செயல் ஊடாக ஊர்ப்பணிக்கு நிதி திரட்டும் காரையின் புதல்வி லண்டன் தேம்ஸ் நதியில் ஒரு மைல் தூரத்தை நீந்தவுள்ள வர்ஷினி தியாகலிங்கம்

காரைநகர் வைத்தியசாலையிலுள்ள தரம் குறைந்த நிலையிலுள்ள பிரசவ விடுதியை நவீன வசதிகள் கொண்டதாக மாற்றியமைக்கவும், கண் ஆடை(*catrac*) அகற்றும் சத்திர சிகிச்சை மேற்கொள்ளவும் உதவுமுகமாக பிறந்த மண்ணின் பற்றோடு நிதி திரட்டி வரும் காரையின் புதல்வி செல்வி.வர்ஷினி தியாகலிங்கம் இந்நிதியினை லண்டன்-காரை நலன்புரிச் சங்கம் ஊடாக வழங்கி குறித்த திட்டங்களை செயற்படுத்த தீர்மானித்துள்ளார்.



செல்வி வர்ஷினி தனது நிதி திரட்டும் நடவடிக்கைக்கு ஆதரவு சேர்க்கும் வகையில் லண்டன் நகரூடாக பாய்கின்ற பிரபல்யம் மிக்க தேம்ஸ் நதியின் ஒரு மைல் நீளத்தை நீந்துகின்ற துணிச்சலான செயற்பாட்டில் ஈடுபடவுள்ளார். இவரது நீச்சல் நிகழ்வு லண்டனிலுள்ள *Royal Victoria Docks* இல் எதிர்வரும் யூலை 2ம் திகதி காலை 9மணிக்கு ஆரம்பமாகும் என அறிவிக்கப்பட்டுள்ளது. செல்வி.வர்ஷினி நீலிப்பந்தனையைச் சேர்ந்த தியாகலிங்கம் அமிர்தநாயகி தம்பதிகளின் இரண்டாவது புதல்வி என்பதுடன் லண்டன் பல்கலைக்கழக பொருளியல் பட்டதாரியுமாவார். ஐயாயிரம் பவுண்ஸ் திரட்ட வேண்டும் என்ற இலக்கோடு செயற்பட்டுவரும் வர்ஷினிக்கு லண்டன் வாழ் காரை மக்கள் மட்டுமல்லாது உலகம் வாழ் காரை மக்கள் ஆதரவு வழங்குவதன் மூலம் முக்கியமான ஊர்ப்பணி நிறைவேற உதவுவதுடன் இவரைப் போன்ற இளம் சமுதாயத்தினர் ஊரிற்கான பணிகளில் ஈடுபடவும் ஊக்குவிக்கும். நன்கொடைகளை *www.justgiving.com/varshini-thiagalingam* என்ற இணையத் தளத்தினூடாக வழங்க முடியும்.

செல்வி. வர்ஷினியின் சகோதரியான துஷ்யந்தி 2007ஆம் ஆண்டு விண்வீழ்(*Sky Diving*) விளையாட்டில் ஈடுபட்டு 10,000 அடி உயரத்திலிருந்து பரசூட் மூலமாகக் குதித்து 5385 பவுண்ஸ் சேகரித்து இலங்கையிலுள்ள மனிதநேயம் என்ற அமைப்பிற்கு உதவியிருந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## "கல்விக்காருண்யன்" ஈ.எஸ்.பி.நாகரத்தினம் யாழ் தேசியகல்வியியற் கல்லூரியின் கௌரவம் பெற்ற காரைநகரின் வர்த்தகப் பெருமகன்

வர்த்தகத் துறையில் இலங்கை மக்கள் பாராட்டும்படியான சாதனைகளை நிலைநாட்டி அதன் மூலமாக ஈட்டிய நிதிவளத்தைப் பயன்படுத்தி ஊர்ப்பணிகளை மட்டுமல்லாது இலங்கையின் பல்வேறு பகுதிகளிலும் சமய, சமூக, கல்விப் பணிகளை மேற்கொள்வதற்கு உதவியும் ஆதரவளித்தும் வருகின்ற காரைநகரைச் சேர்ந்த வர்த்தகப் பெருமக்களது செயலானது காரைநகருக்கு நற்பெயரையும் புகழையும் ஈட்டிக் கொடுத்துவருகின்றது.

இந்தவரிசையில் யாழ் நகரின் பிரபல வர்த்தகப் பெருமகனும் சமூகசிந்தனையாளரும் காரை.அபிவிருத்திச் சபையில் முனைப்போடு செயலாற்றிவருகின்ற நிர்வாக உறுப்பினருள் ஒருவருமாகிய திரு.ஈ.எஸ்.பி.நாகரத்தினம் அவர்கள் யாழ் மாவட்ட மக்களினதும் காரைநகர் மக்களினதும் பாராட்டிற்கும் கௌரவத்திற்கும் உரியவராக விளங்கிவருகின்றார். சமய சமூக கல்விசார்ந்த அமைப்புக்களிற்கு திரு.நாகரத்தினம் அவர்களால் வழங்கப்பட்டுவருகின்ற சேவையினைக் பாராட்டிக் கௌரவிக்கும் பொருட்டு யாழ்தேசிய கல்வியியற் கல்லூரியினால் ஓர் விழா சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டு அண்மையில் நடாத்தப்பட்டிருந்தது. கல்லூரியின் சார்பில் உபபீடாதிபதி திரு.நாகரத்தினம் அவர்களிற்கு "கல்விக்காருண்யன்" எனறபட்டத்தினை வழங்கிக் கௌரவித்தார்.

இலங்கை செஞ்சிலுவைச் சங்கத்தின் காரைநகர்க் கிளையினால் அண்மையில் நடாத்தப்பட்டிருந்த தொண்டர் கௌரவிப்புவைபவம் ஒன்றில் "மனிதநேய ஈகையாளன்" என்றபட்டம் திரு.நாகரத்தின்ம் அவர்களிற்கு வழங்கப்பட்டு கௌரவித்திருந்தமையும் இங்கு சுட்டிக்காட்டத்தக்கதாகும்.

## இருபது ஆண்டுகளுக்கு முன்னர் குடியிருப்புக்களை இழந்த 55 குடும்பங்கள் அரசின் நஷ்டஈட்டைப் பெறவுள்ளன.

காரைநகர் கடற்படை முகாம் விஸ்தரிக்கப்பட்டபோது பலகாடு, நீலங்காடு ஆகிய குறிச்சிகளைச் சேர்ந்த 137 குடும்பங்கள் அவர்களது குடியிருப்புக்களையும் காணிகளையும் இழக்க வேண்டியேற்பட்டது. இன்றைக்கு 20ஆண்டுகள் கழிந்து விட்ட நிலையில் இவர்களுள் 55குடும்பங்களுக்கான நஷ்டஈட்டுத்தொகை தீர்மானிக்கப்பட்டு விரைவில் இதனை வழங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருவதாக உதவி அரசாங்க அதிபர் திரு.ஜெயசீலன் தெரிவித்தார். அத்துடன் தீர்மானிக்கப்படாது மிகுதியாகவுள்ள 82 குடும்பங்களிற்கான கொடுப்பனவுகளை செய்வதற்குரிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருவதாகவும் உ.அ.அதிபர் மேலும் தெரிவித்தார்.

## ஒருங்கிணைப்புக் குழுக்கூட்டத்தில் காரைநகரின் அபிவிருத்தி தொடர்பில் முக்கிய தீர்மானங்கள் எடுக்கப்பட்டுள்ளன.

காரைநகர் உதவி அரசாங்க அதிபர் பிரிவின் ஒருங்கிணைப்புக்குழுக் கூட்டம் அண்மையில் தியாகராஜா மத்திய மகாவித்தியாலய நடாராஜா ஞாபகார்த்த மண்டபத்தில் பாராளுமன்ற உறுப்பினர் திரு. சில்வேஸ்திரி அலன்ரின் தலைமையில் நடைபெற்றிருந்தது. இக்கூட்டத்தில் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா அவர்களுடன் பாராளுமன்ற உறுப்பினர்கள், உதவி அரசாங்க அதிபர் திரு.ஜெயசீலன் பொதுஅமைப்புக்களின் பிரதிநிதிகள், திணைக்கள அதிகாரிகள் உட்பட ஏராளமானோர் கலந்து கொண்டனர். காரைநகர் பிரதான சுற்றுவீதி [illegible] திகளின் புனரமைப்பு, கல்வி, மருத்துவம், கடற்றொழில் பொன்றனவற்றின் அபிவிருத்தி தொடர்பில் கருத்துக்கள் பரிமாறப்பட்டு தீர்மானங்கள் எடுக்கப்பட்டன. சில தீர்மானங்கள் தொடர்பில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அமைச்சரினால் உடன் பணிப்புக்கள் [illegible]தாகவும் அறியப்படுகிறது. கட்டாக்காலி கால்நடைகளை கட்டுப்படுத்தும் முயற்சி தோல்வியடைந்த நிலையில் சிறுபோக பயிர்செய்கை மேற்கொள்ளப்பட முடியாத நிலை ஏற்பட்டு விவசாயிகள் பலர் பாதிப்படைந்துள்ளதை பலரும் இக்கூட்டத்தில் [illegible]ரஸ்தாபித்ததைத் தொடர்ந்து சம்பந்தப்பட்ட அனைத்துத்த தரப்பும் இணைந்து கட்டாக்காலி கால்நடைகளை கட்டுப்படுத்த உடன் [illegible]கள் எடுப்பதென தீர்மானிக்கப்பட்டது. காரைநகரிலுள்ள சில பொது அமைப்புக்களிற்கு பன்முகப்படுத்தப்பட்ட வரவு-செலவுத் திட்டத்தினூடாக கொள்வனவு செய்யப்பட்ட தளபாடங்களும் உபகரணங்களும் இக்கூட்டத்தில் வைத்து வழங்கப்பட்டன.

## [illegible]றிய மாணவியின் கல்வித்திறன் மழுங்கடிக்கப்படாதிருக்க உதவி வழங்கிய புலம்பெயர் காரை அன்பர்

தியாகராசா ம.ம.வித்தியாலயத்தில் 7ஆம் வகுப்பில் பயின்று வருகின்ற வறுமைப்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த மாணவி ஒருவர் [illegible]ல் மிகத்திறமைசாலியாக இருந்து வருபவர். பல போட்டிப்பரீட்சைகளில் தோற்றி மாகாண மாவட்ட மட்டங்களில் தெரிவானவர். [illegible]வரத்துக்கட்டணத்திற்கு வசதியற்றநிலையில் வெளியில் நடந்த பரீட்சைகளிற்கு தோற்ற செல்லமுடியாத சூழ்நிலை இம்மாணவிக்கு [illegible]து பரிதாபத்திற்குரியதாகும். திறமை மிக்க இம்மாணவியின் வறுமை நிலை இவரது கல்வி முன்னேற்றத்திற்கு பெரும் தடையாக [illegible]து. அண்மையில் பிரான்சிலிருந்து காரைநகருக்கு விஜயம் செய்திருந்த களபூமியைச் சேர்ந்த கணேசபிள்ளை மயில்வாகனம் என்பவர் [illegible]கராசா ம.ம.வித்தியாலய அதிபர் திரு.பொன்.சிவானந்தராசாவை சந்தித்தபொழுது குறித்த மாணவியின் பரிதாபநிலைகுறித்து அதிபர் [illegible]த்துக்கூறியபோது திரு.மயில்வாகனம் உடனடியாக ஒருதொகைப்பணத்தினை அதிபர் ஊடாக மாணவிக்கு வழங்கியதுடன் மாணவியின் அனைத்து கல்விச்செலவுகளையும் பொறுப்பேற்றுக்கொள்வதாக அதிபரிடம் உறிதியளித்துள்ளார்.

## அத்திபுர கந்தன் ஆலய அர்த்த மண்டபம் அமைக்கும் பணி ஆரம்பித்து வைக்கப்பட்டது

காரைநகர் பெரியமணல் அத்திபுரக் கந்தன் ஆலயத்தில் அமைக்கப்படவுள்ள அர்த்த மண்டபத்திற்கான அடிக்கல்லினை காரைநகர் பிரதேச சபைக்கு ஐ.தே.கட்சி சார்பில் போட்டியிடும் முதன்மை வேட்பாளர் திரு.கணேசபிள்ளை பாலச்சந்திரன் நாட்டி வைத்து மண்டபம் அமைக்கும் பணியினை சம்பிரதாயபூர்வமாக ஆரம்பித்து வைத்துள்ளார். சென்ற 19.03.2011இல் ஆலய அறங்காவலர் தலைமையில் இடம் பெற்ற இவ்வைபவத்தில் நீலிப்பந்தனையைச் சேர்ந்த இளைப்பாறிய யாழ்ப்பாண நீதிவான் எஸ்.ஏ.ஈ.ஏகநாதன், காரைநகர் பிரதேச கலாச்சார உத்தியோகத்தர், வட-கிழக்கு கிராம சேவையாளர் திரு.இ.திருப்புகழூர்சிங்கம் இப்பகுதியைச் சேர்ந்த சுவிற்சலாந்தில் வசித்து வந்த திரு.கருணாகரன் ஆகியோர் கலந்துகொண்டு மங்கள விளக்கேற்றியும், தொடர்ந்து கற்களை நாட்டியும் சிறப்பித்திருந்தனர்.

## லண்டன் F.R.A.S கழகத்தின் அங்கத்துவம் பெற்ற முதல் இலங்கையர்

*காரைநகர் பயிரிக்கூடல் பகுதியில் 1865-1922 காலப்பகுதியில் வாழ்ந்த அல்லின் ஏபிரகாம் என்ற அறிஞர் 1910இல் தோன்றிய [illegible] F.R.A.S [illegible] இலங்கையரில் அல்லின் ஏபிரகாம் என்பவர் காரைநகருக்குப் [illegible]. இன்றும் பாவனையிலுள்ள அல்லின் வீதி என்பது இவரின் பெயரால் அமையப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.*

உ
சிவமயம்





# ஈழத்துச் சிதம்பரம்

## திருவருள்மிகு சௌந்தராம்பிகை சமேத சுந்தரேஸ்வரப் பெருமான் தேவஸ்தானம்

## காரைநகர் சிவன்கோயில்

# நித்திய பூசை உபயம்

சிவநேயச் செல்வர்களே!

சிவ பூமியாம் காரைநகர் திண்ணபுரத்தில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் சௌந்தராம்பிகை சமேத சுந்தரேஸ்வரப்பெருமான் திருவருளால் மகா கும்பாபிஷேகம் 06–06–2011 அன்று மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து ஆலயத்தில் தினமும் ஆறு காலப் பூசை அதிகாலை 5:30 மணி, காலை 8:00 மணி, மதியம் 12:00 மணி, மாலை 4:30 மணி, மாலை 5:30 மணி, இரவு 7:00 மணி ஆகிய நேரங்களில் நடைபெறுகிறது. பூசை உரிய நேரத்தில் சிறப்பாக நடைபெறுவதற்கு மேலதிக சிவாச்சாரியர்கள் உட்பட சகல ஒழுங்குகளும் செய்யப்பட்டுள்ளன.

ஒருநாள் நடைபெறும் பூசையை அடியார்கள் உபயமாக செய்வதற்கு ஏற்ற நடைமுறைகள் மேற்கொள்ளப்படுகின்றன. உங்களுடைய பிறந்த தினத்தன்று, உங்கள் பிள்ளைகளின் பிறந்த தினத்தன்று, உங்கள் திருமண தினத்தன்று, அலலது உங்கள் மூதாதையர் சிரார்த்த தினத்தன்று ஒருநாள் பூசையை உங்கள் உபயமாக ஏற்று இறைவனுக்கு மலர்சாத்தி நெய்வேத்தியமாக்கும் சிறந்ததொரு சிவ கைங்கரியத்தைச் செய்து சௌந்தராம்பிகை சமேத சுந்தரேஸ்வரப் பெருமானின் திருவருளைப் பெறுவீர்களாக. ஒருநாள் பூசைக்கு 10,000 ரூபாய்கள் செலவாகும்.

நித்தியபூசையை உபயமாகச் செய்யவிரும்புவோர் கோவில் ஆதீனகர்தாக்களுடன் அல்லது அடியார் சபையினருடன் தொடர்பு கொள்ளவும்.

தொடர்புகளுக்கு:
ஈழத்துச் சிதம்பர தேவஸ்தானம், ஆதீனகர்த்தாக்கள் – தொலைபேசி இல: 0094 212225407
திரு. ஆர். ஜெயராசா, தலைவர் அடியார் சபை – தொலைபேசி இல. 0094 777283812
திரு. எஸ். ரி. பரமேஸ்வரன், செயலாளர் அடியார் சபை – தொலைபேசி இல. 0094 777306473
திரு. டபிள்யூ. எஸ். கிருபாரட்ணம், பொருளாளர் அடியார்சபை – தொலைபேசி இல: 0094 11 2585990

**வெளிநாடுகளில் வசிப்பவர்களுக்கு:**

வெளிநாடுகளில் வசிப்பவர்கள் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன உபயகாரர் விபரப் பத்திரத்தை பூர்த்தி செய்து **karainagar.sivankovil@gmail.com** என்ற மின் அஞ்சலுக்கு அல்லது 1–416–267–5666 என்ற தொலைநகலுக்கு அனுப்பி உபயத்தைப் பதிவு செய்து கொள்ளலாம்.

தொடர்புகளுக்கு:
கனடா: மா.கனகசபாபதி 416–267–6999
சுவிற்சலாந்து, மத்திய ஐரோப்பா: ஆறுமுகம் செந்தில்நாதன் 0041 448514137
லண்டன்: வி. நாகேந்திரம் 0044 208 4261036

ஈழத்துச் சிதம்பரம்
காரைநகர்
20–06–2011

ஆ. அம்பலவிமுருகன்
மு. சுந்தரலிங்கம்
ஆதீனகர்த்தாக்கள்

காரைநகர் உதவி அரசாங்க அதிபர் பணிமனையால் உருவாக்கப் பெற்ற

# காரைநகர் பிரதேச கீதம்

வாழிய வாழிய வாழியவே - காரை
நகர் என்றும் வளமுடன் வாழியவே!
சூழுக இன்பமும், வெற்றியுமே - மாந்தர்
சொர்க்கம் இம் மண்ணென வாழ்ந்திடவே!

ஈழத்துச் சிதம்பர ஆலயமும் - வாழும்
எண்ணற்ற கோவிலின் அதிசயமும்,
கோவளக் கலங்கரை, கசூரினாவும் - சூழ்ந்து
கொழித்திட அலையிடை தவழும் நிலம்!

பெருவயல், கடல் படு திரவியங்கள் - தெங்கு,
பனைவளம், வணிகம், கைத்தொழில் வகைகள்
பரந்து சென்றுழைப்பவர் இடும் முதல்கள் - காரைப்
பதிதனை வளர்த்திடும் பெரும்பலங்கள்!

கலைஞர்கள், கவிஞர்கள், இசைநிபுணர் - ஞானக்
கல்வியில் சிறந்தவர், உடல் வினைஞர்
தமிழ்ச் சைவந் தளைத்திடத் தமை விதைத்தோர் - தோன்றித்
தனித்துவம், தனிப் புகழ், பொறிக்கும் நகர்!

தருமத்தின் விழுமியம் செழிக்கும் பதி - செல்வம்
தடையின்றிப் பெருகிடும் எளிமை மடி!
குறைகளைந் தெழுந்து இங்கொரு உயர்ச்சி - கண்டு.. எம்
கொடி அசைத்து அடைவோம் நல் அபிவிருத்தி!

புலவர் வே.குமாரசாமி இயற்றிய
ஒரு கீதத்தினைத் தழுவி இக்கீதத்தினை
ஆக்கியவர்
காரை உதவி அரச அதிபர்
திரு.இ.த.ஜெயசீலன்

பின்னணி இசை:
திருவாளர் G. அற்புதன்



காரைநகர் பிரதேச கொடி

இசையமைத்து பாடியவர்:
யாழ் பல்கலைக்கழக
முதுநிலை இசை விரிவுரையாளர்
Dr. ஸ்ரீதர்சனன்

இணைந்து பாடியவர்:
இசை ஆசிரியை
ஸ்ரீமதி நந்தினி உதயகுமார்